ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# வாலிமோட்சம்

## மூலமும்-உரையும்



இஃது

மணிமங்கலம்,

வடிவேலுமுதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு,

மதுரை புதுமண்டபம் புத்தகஷாப்

பி. நா. சி. கடைகாரியம்,

எம். கிருஷ்ணப்பிள்ளை யவர்களால்

பிடாரித்தாங்கல்,

நாராயணசாமிமுதலியார்குமாரர்

சிதம்பரமுதலியாரவர்களது

சென்னை

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1914.

சென்னை பிரம்பூர் குயப்பேட்டை 65-வது-நெம்பர்வீடு.

உ

கணபதிதுணை.

---

புதிதாய் அச்சிட்ட

# வள்ளியம்மை சுயம்வரம்.

---

இந்த வள்ளியம்மை மான்வயிற்றிற் ஜெனித்து குறவர்க் கரசனாகிய நம்பிராசன் கிரகத்தில் வளர்ந்து கன்னிப்பருவங்கழித்து தக்க பருவதிசையடைந்து வனஞ்சென்று செந்தினைக்கதிரைப் பக்ஷிஜாதிகள் கொய்யாது காவல்புரிந்து நாரதமா முனிவரோடு வாதுகூறிச்சுப்ரமண்ய வேடுவனோடு வாதுபேசிப் பண்டாரக் கிழவனோடு மனமகிழ்ந்து பரண்மீதிருந்து அன்னவருக்குத் தொண்டுசெய்து சுனையையடுத்து யானையாற் சிவசுப்பிரமணியரை காந்தர்வமணம்புரிந்து தினைக்கதிரறுத்து அண்ணமார்களோடு சிற்றூர் சென்று குகனை நினைந்து சோகித்துப் பின்னர்ச் சிவசுப்பிரமணியரைப் பாணிக்கிரகணஞ் செய்து திருப்பரங்குன்றஞ் செல்லுதல். இப்பாகங்களில் சாஸ்திரயுக்தப்படி நவரசங்களாலும் இந்துஸ்தான், பாரீஸ், கெஜல், டோமரி, துக்கடா, சிந்து, கீர்த்தனை, கலிப்பா, வெண்பா, விருத்தப்பா, ஓரடிப்பதம் முதலிய வர்ணமெட்டுகளினு மியற்றப்பெற்று நல்ல கிளேஸ் கடிதத்தில் ஆங்காங்கு ஐதீகப்படங்களமைத்து அச்சிட்டுத் தயாராயிருப்பதாலும் காப்பி சொற்பமாய் அச்சிட்டிருக்கிறபடியாலும் வேண்டுவோர் என்விலாசத்திற் கெழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

புத்தகம் ஒன்றுக்கு விலை அணா 0 12 0

என்னுடைய பெரிய கேட்லாக் வேண்டுமானால் அரையணா ஸ்டாம்பு அனுப்பினால் அனுப்பப்படும்.

இப்படிக்கு

பி. நா. சிதம்பரமுதலியார்.

பிரம்பூர் பாரெக்ஸ் போஸ்டு.

மதராஸ்.



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# வாலிமோட்சம்

மூலமும் - உரையும்.

4159



காப்பு.

திருவளருங்கிஷ்கிந்தைக் கிறைவனும்வாலியையுஞ்
சிதைத்திராமன்
மருவுபெருப்பரமபத மளித்தவொருசரிதமதை
மாநிலத்தில்
உரிமைபெறச்செந்தமிழி லுகந்துரைக்கவோங்காரத்
துள்ளாய்நின்ற
கரிமுகத்தெம்பெருமானைக் காலையிலுமாலையிலும்
கருதிவாழ்வாம்.

அவதாரிகை.

ஸ்ரீராமபாணம் தைத்தமாத்திரத்தில் வாலி மதிமயங்கி கூறத் தொடங்கினான் அதெப்படியெனில்.

கவி.

நேமிதான்கொலோ நீலகண்டன்நெடுஞ்சூலம்
ஆமிதாங்கொலோ வன்றெனின்குன் றுருவயிலோ
நாமவிந்திரன் வச்சிரப்படைகொலோநடுவிற்
போமெனும்படி பொன்றுமோயாதெனப்புகல்வேன்.

இதன்பொருள்.

வாராய்மனதே யானும்சுக்ரீபனுமாக மனக்குரோதத்தினாலெதிர்த்து கைகலந்து போர்செய்கிறசமையத்தில் இன்னுடைய நடுமார்பிலொரு ஆயுதமல்லவோ வந்துபட்டிருக்கிறது இந்த ஆயுதமானது

என்னுடைய மார்பைத்துளைத்து பிராணவாயுவைப்பருகி மறுபுறமும்
பாய்ந்திருக்கிறது இது ஆருடைய ஆயுதமென்று ஆராய்ந்துபார்க்கு
மிடத்தில்.

## நேமிதான்கொலோ-என்பது.

முப்பத்திரண்டுலட்சம் யோசனை விஸ்தாரமான க்ஷீராப்தியின்
கண் ஆயிரம் பணாமுடிச்சேடன்பேரில் பள்ளிகொண்டு கெருடவாக
னமுங் கெருடத்துவசமும்விளங்கச் சங்குசக்கரம் துரோணம் வாள்
கெதையென்று சொல்லப்பட்ட பஞ்சாயுதமுந்தரித்து பூமிதேவியும்
லட்சுமியும்வசிக்க சனகசனந்தனர் சனற்த்தனர் சனற்குமாரர் முத
லான பிரமரிஷிகள் வணங்கித்தோத்திரஞ்செய்ய தும்புருநாரதர் கீத
ம்வடிக்க சித்தவித்தியாதரர் நாகர் காந்தருவப்பெண்கள் தெய்வரம்
பைமுதலானவர்களும் பரதநாட்டியம்நடிக்க தங்கநவரத்தினகசிதநாக
மணியும் மகுடகிரீடதுளபமாலிகாபரணமுங் கங்கணகடககேயூரமுத்
துநாகரத்தினாபரணமுங் கரகமல விரலாழிச் சேர்வையுந்துலங்க அமி
ர்தபரிமளவிலாசமும் கோலாகலமானவேதாளதாளமும் நீலமரகதம
ணல்மேனியும் நவமணிக்குண்டல மண்டலகொண்டமும் சாஸ்திரநாம
தீபமோகனமாலையும் அழிகொளிவிரிந்த திருவரையொயிலும் மரகத
நீலப்பச்சைவர்னக் கச்சுடையும் பீதாம்பரச்சேர்வையும் பீதாம்பரக்
குடையும் பாததண்டையும் ரணவீரகண்டாமணி நாகமும் சத்துருச
ங்காரவீரகோரமும் மித்துருபரிபாலனமொத்தசாந்தத்தோடு ஸ்ரீவை
குந்தமென்றநகரில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமந்நாராயணருடைய தி
ருக்காத்தில் தாங்கியிருக்கப்பட்டநேமியோ அதுஅயன் இந்திரன்மு
தலியதேவர்கள் வேண்டுகோளால் பூர்வத்தில் சலந்தராசுரன்பேரில்
ஏவினசக்க்ரமாயிற்றே அப்படிப்பட்டசக்கரத்தை என்பேரில் விடலா
மா நானென்னவபராதியர் இதென்ன ஆச்சரியம் ஆகையால் அந்நா
ராயணருடைய சக்கராயுதமுமல்ல.

## நீலகண்டநெடுஞ்சூலம்-எ-து.

நீலகண்டனென்றும் கறைக்கண்டனென்றும் காலகண்ட மூர்த்
தியென்றுஞ் சொல்லப்பட்ட சங்கரன் சதாசிவன் நிமலன் நிருதரன்
இறையவன் சர்ப்பாபரணன் சந்திரசேகரன் அடியவர்க்கினியன் கால
காலன் காலசந்திரசூ ன் காமதகனன் கங்காளன் திரிநயனன் திரிபு
ராந்தகன் திரியம்பகன் திரிலோகநாயகன் திரியட்சரன் திரிகோண
ன் திரிசூலதேவன் திகம்பரன் மான் மழுவும் துடியுங் கபாலமுஞ்
சூலமேந்தி விபூதிருத்திராட்சமாலிகாபரணனுய் பஞ்சாட்சரமூர்த்தி

யாகி புலித்தோலுடையும் ஆனைத்தோல் போர்வையுமாம் இமோர்ப்
பர்வதராசகுமாரி தாசமேனிதமனோகரனுப் பிரகாசிக்கப்பட்ட பரம
சிவனைச் சங்கரிக்கவேண்டுமென்று தாருகாவனமகாரிஷிகள் அவிகார
வேள்விசெய்து அதில் ஒருதிரிசூலத்தை நியமித்து அவர்பேரிலே
வினர்கள் அவர் அந்தசூலத்தைபிடித்துத் தனக்கு ஆயுகமாகவல்ல
வோ வைத்துக்கொண்டார் அந்தத்திரிசூலிதானோ இதுவென்றும்பா
ர்த்தால் அவருந்துஷ்டர்பேரிலல்லவோ ஏவுவார் யானோவென்றால் அ
வரைப்போல நாராயணற்குப்பத்தரல்லவோ ஆகையால் அவரும்என்
பேரில் ஏவமாட்டார்.

ஆமிதாங்கோலோ வன்றெனிற்குன் றிருவயிலோ-எ-து.

ஹரிசக்கரமுமல்ல ஈசன்சூலமுமல்ல இன்னும் விசாரிக்குமிடத்
தில் ஆதிநாளையில் அசுரகுருவான சுக்கிரபகவான் காலகேயன் மக
ளாகிய மாயையென்பவளையழைத்து அவளுக்குவிஞ்சைமந்திரம் உப
தேசித்து அவளைக்காசிபருடைய தபசைக்குலைந்துப் புணர்ந்துவரும்
படியனுப்ப அவள்போய் அப்படியேகூடிச் சூரபன்மன்சிங்கமுகாசுர
ன் ஜெகமுகாசூரன்முதலான புத்திரர்களைப்பெற்றாள் அவர்கள் பிரப
லமாகிய புத்திரமித்திராதிகளோடு கூடிப்பெருகித் தென்சமுத்திரத்
தில் வீரமகேந்திரபுரிபட்டணமுண்டுபண்ணி அதிலிருந்து பதினாறு
லோகத்தையுமாண்டு திரிமூர்த்திகளும் தேவாதிகளும் பணிவிடை
செய்துவரும்படி அவர்களை அநேகவுபத்திரவஞ்செய்துவருகிற நாளி
ல் ஒருநாள் தேவாதிகளைக்காக்கவேணுமென்று சிவன்திருவுளம்வை
த்தமாத்திரத்தில் பிர்மாவிஷ்ணு ருத்திரன் சதாசிவன் மகேசுவரன்
மனோன்மணியென்கிற ஆறுதெய்வீகமும் ஒருருவமாய்ப்பரமசிவனு
டைய அக்கினிகண்ணிற்பிறந்து சரவணப்பொய்கையில் வளர்ந்துபார்
வதியம்மனுக்குப் புத்திரனாகவமைந்து சுத்தவீரர்களான லட்சத்தொ
ன்பது தம்பிமார்களும் இரண்டாயிரம்வெள்ளம் பூதப்படைகளும் பு
டைசூழ்ந்துவரப் பராசத்தியைத்தானே வேலாயுதமாகக்கொண்டு அ
ம்சவாகனமேறி வீரமகேந்திரபுரிபட்டணத்திற்கு அசுரசங்காரஞ்செ
ய்யத்தக்கதாய்ப்போகிறபோது ஓம்சரவணபவாவென்ற சடாட்சரரூ
பியாகிய சிவசுப்பிரமணியக்கடவுள் கிரவுஞ்சகிரிபர்வதத்தையூடுருவச்
செய்யப்பட்ட வேலாயுதந்தானோ இதுவென்று பார்க்கிறபோது அவ
ர்பஞ்சகர்த்தாக்களும் பராசத்தியும் ஒருருபமாகப் பிறந்துதேவாதிக
ளுக்குச் சேனாபதித் தலைமைபூண்டிருக்கிறபடியினால் சத்தியதெய்வீ
கமானபடியினாலும் அவர்என்பேரிலேவரமாட்டார் ஆகையினால் இது
சுப்பிரமண்யருடைய வேலாயுதமுமல்ல.

நாமவிந்திரன் வச்சிரபடைக்கொலே நடுவில்-எ-து.

பெருமைபொருந்திய ஆயிரங்கண்ணனென்று பேர்பெற்று காசிபமகாரிஷியினிடம் உற்பத்தியாகிய முப்பத்துமுக்கோடி தேவாதிகள்வந்து சேவிக்கத்தக்கதாகக் காமதேனுவுங் கற்பகத்தருவுஞ் சுரபிசிந்தாமணியுங் கேட்டபொருள்களைக்கொடுத்து பணிவிடைசெய்ய ஊர்வசிமேனகை அரம்பை திலோர்த்தமை நர்த்தினி வாகினி கந்தர்ப்பமாலிகை சிங்காரமஞ்சரி பரிமளவல்லி பங்கேருகாட்சி மதனைப்பேடு காந்தர்வதத்தை மதனகல்யாணி உல்லாசனி சல்லாபவஞ்சுதாரம்பை அதிகரலீலை ஆனந்தவேணி சீமந்தலீலை சரசமோகினி சங்கீதலீலை மதனசுந்தரியென்கிற தெய்வப்பெண்கள்வந்து ஆலகாலமேந்திக்கவரிவீசச் சாமரையிரட்ட ஆலவட்டம் குடைதாழ விசிறிபரிமாறிப் பணிவிடைசெய்யத்தக்கதாக அயிராவதமேறி இடிக்கொடிபிடித்து உச்சைச்சிரவமென்கிற குதிரையையும் மகாண்டபமென்கிற வில்லும் வச்சிரமென்கிற ஆயுதமுந்துலங்க இந்திராணி கல்யாணசுமேதமனோகரனாகிய வசந்தமண்டபத்திலிருந்து ஆயிரங்கண்களுஞ் சேரியதுலங்க மகாவைபோக்கியத்துடன் வாழப்பட்ட தேவேந்திரன்கையிலிருக்கிற வச்சிராயுதந்தானே இதுவென்று பார்க்கிறபோது அவர்சத்துருக்களை அடக்கியாளப்பட்டபடியினால் துஷ்டர்கள் பேரிலேவுகிறதல்லாமல் என்பேரிலேவமாட்டார் அல்லாமலும் நான் தேவாமுர்தங்கடைந்து அவருக்கு அமுர்தங்கொடுத்திருக்கிறேன் அவர் உன்னுடைய பிதாவானபடியினால் அதாவது வச்சிராயுதமுமல்ல ஆனபடியினால்.

யோமெனும்படி யொன்றுமேயாதெனப்புகல்வேன்-எ-து.

சொல்லப்பட்ட நாராயணரும் பரமசிவனும் சுப்பிரமணியரும் நின்று அவருடையஆயுதங்களை யேவுவார்களாகில் அது என்பேரில்பட்டு மார்பைத்துளைக்கிறதுமில்லை இந்தவாயுதம் என்மார்பைத்துளைத்து மறுபுரத்தில்பாய்ந்திருக்கிறபடியினால் இதுவென்னஅற்புதமோ என்ன அவாந்தரமோசமோ ஒன்றுந்தெரிகிலேன்-எ-று.

அவதாரிகை.

அதுவுமல்லாமலிந்த ஆயுதத்தைப்பிடித்து நிலைநிறுத்திப்பார்க்கிறபோது இன்னதென்றுதெரியவில்லையே ஆனாலுமிதுதெய்வவாயுதந்தானென்றுகண்டேன் இந்தவாயுதத்தினுடைய பெருமையெப்படியெனில்.

கவி.

மும்மைசாலுகமெல்லாம் மூலமந்திரத்தைமுற்றும்
தம்மையேயெவர்க்குமெட்டாத் தனிப்பெரும்பதத்தைத்தானே
இம்மையேமறுமைநோய்கள் மருந்தெனும்இராமனென்னும்
செம்மைசேர்நாமந்தன்னைக் கண்களாற்றெறியக்கண்டேன்

இதன்பொருள்.

மும்மைசாலுலகமெல்லாம் மூலமந்திரத்தைமுற்றும்-எ-து.

வாராய்மனமே அதிசயம் அதிசயம் மகாபாக்கியம் பெற்றுக் கொண்டேன் மும்மையென்றுசொல்லப்பட்ட ஆகாயபாதாளபூலோகம்யென்றுசொல்லுகின்ற மூன்றுலோகத்திலுள்ள சீவர்களும் ஆணவம்மாயை காமியமென்று சொல்லப்பட்ட மலசகிதப்பட்டு ஆசாபாசத்தினால் பெண்டுபிள்ளை பதார்த்த தனதானிய சம்பத்தின்பேரில் மனதுவைத்து மோகாந்தகாரவலையில் அகப்பட்டுக்கிடப்பார்கள் அவர்களுள் ஆயிரம்பதினாயிரத்தில் ஒருவன் பூர்வபுண்ணிய வாசனையினால் அரசர்பத்தியோடோ சாஸ்திரதியானமாகிய புராணிசாஸ்திரங்களையுணர்ந்து பெரியோர்களிடத்தில்வாசமாகிக் குருமுகாந்தரத்தில் உபதேசம்பெற்று விவேகத்தினால் திருமூலமந்திரமே மந்திரம் திரு அஷ்டாட்சரமே அட்சரம் நாராயணனேதெய்வம் நாராயணனே பிர்மமென்றறிந்து அஷ்டாட்சரத்தைச்செபித்துத் தோத்திரஞ்செய்து வணங்கினால் அப்படிக்கொத்த விஷ்ணுபக்தர்களுக்குப்பலனாகச் சித்திக்கின்ற மூலவஸ்துவை.

தம்மையே யெவர்க்குமெட்டாத் தனிப்பெரும்
பதத்தைத்தானே-எ-து.

திரவட்டாட்சரமானதைப் பத்திமுத்தி வயிராக்கியத் தோடே மனம் புத்தி சித்தம் ஆங்காரமென்னும் அந்தக்கரணங்களை நிலைநிறுத்தி ஒருவழிப்படுத்திதியானித்து அதனாலடையப்படுவதுதான் தனித்து சமானமற்றிருக்கிற நாலாம்பதமாகிய ஞானநிலைமையைலோகத்திலே நான்குவகைகர்மத்தினாலே பகவானுடைய கடாட்சம்பெறவேணும் அதெப்படியெனின் சரியைகிரியை யோகம்ஞானமென்கிறசதுர்விதகர்மமுண்டு அவற்றுள் சரியையென்பது தனக்கு மேலானவரிடத்திற்சென்று சந்தனம் புட்பம் தூபதீபநைவேத்திய அபிஷேகஆராதனைகள்செய்வித்து ஆலயங்களில் அன்புஆசாரத்தோடேதெய்விகங்களை வணங்கிக் கடாட்சம்பெற்றுக்கொண்டால் அந்தச்சரியை மார்க்கத்தினால் வரப்பட்டது சாலோகமாம் சாமீபமென்பது இந்தசென்

மம்போக மறுசென்மம்போக மறுசென்மத்திலே குலசிரேஷ்டனாய் சன்மார்க்கனாய் பிரபலனாய் புத்திரமித்திரபவுத்திர கோத்திரத்துடனேவாழ்வதாம், கிரியையென்பது தன்னுடைய அறிவினால் கர்மங்களை அறிந்து ஸ்நானபானஞ்செய்து தேகசுத்திசெய்து ஆத்துமாசுத்தியோடே புஷ்பபத்திரங்களை விக்கிரகதேவதைகளை அர்ச்சனைசெய்து ஸ்தோத்திரம் பிராணாயாமம் மந்திரம்செபித்து ஜலகந்த புஷ்பதூபநைவேத்தியங்களினால் வழிபாடுசெய்து பூஷணத்தியானஞ் செய்து பகவானை வணங்கப்பட்டது கிரிகைமார்க்கம் இதினால் வரப்பட்டது சாமீபம் அவன்மறுஜென்மத்தில் பிராமணனாகப்பிறந்து பாக்கியவந்தனாகிச் சாத்திரபுராணங்களையோர்ந்து மகாபக்தனாகிய ஏற்றகைக்கு இடுங்கையாகிச் சகலத்திராளுக்கும் மேலானவனாகயிருந்து இரட்சிக்கப்பட்டகர்த்தனாகித் தாட்சணணியனாகச் சாந்தகுணசீலனாகிக்கீர்த்திமானாகவாழ்வான் யோகவழியானது சாஸ்திரங்களை யோர்ந்து ஞானமார்க்கத்தையுணர்ந்து தத்துவபோதத்தையறிந்து கருவிகரணாதிகளைத்தெரிந்து ஆறாதாரங்களினுடைய நிலையறிந்து முகக்கண்ணை மூடி யுட்கண்ணினாலே இருதயகமலத்திலே சொரூபத்துடன் கண்டு தியானிக்கப்பட்டதுயோகம் அதனால் வரப்பட்டபலன் சொரூபமான தேவயோனியில்ஜெனித்து தேவபோகமநுபவித்து வாழ்வான் ஞானமென்பது பூர்வஜென்மத்தில் அநேகசன்ம புண்ணியஸ்தனாகிய இதிகாச புராணங்களைக்கற்று ஞானசாஸ்திரார்த்தங்தெரிந்து வேதாகமங்களையறிந்து தூலசூட்சுமக் காரணமென்னும் மூன்றுபாகத்தையறிந்து வருங்காலம் செல்காலம் நிகழ்காலமென்னும் மூன்றுகாலங்களையுமறிந்து பாவமின்னதென்றும் பகுத்தறிந்து விவேகத்துடன் அவ்விரண்டையு மிசிரியபரிபாலனஞ்செய்து தேகமும் தேகியுமறிந்து தேகத்தை யனித்தியமென்றுதள்ளி நித்தியமான ஆத்மாவானதைப்பிரமவெளியிலே அயிக்கியஞ்செய்து இந்தமனமான அந்தக்கரணங்கள்நாலும் நன்னான்குபிரிவாகிய பதினாறு சுத்தவிருக்கியானத்தையுந்தவிர்த்து வாக்குமனதுக்குமெட்டாத மரமவெளியிலே அயிக்கியஞ்செய்ததுஞானம் இந்தஞானமார்க்கத்தினால் வரப்பட்டது சாயுச்சியமானநாலாம்பதம் அதுபரமவெளியிலே லயித்து ஜனனமரணமில்லாமல் மேலாம்பதமனுபவித்து இப்படி பெருமை பெற்றிருக்கிற பரம்பொருளை வாராய்மனமே.

## பிரமம் என்பது.

இம்மையென்றுசொல்லப்பட்ட இந்தச்சென்மத்திலேயிருந்துமறுசென்மத்திலே ஒழியாதகருவினுடையகெர்ப்பகோளத்தில் உற்பவி

யாமல் இரந்து பிறந்து சுகதுக்கங்களை யனுபவிக்கப் பட்டதாயென்றும் மகமென்றும் இரண்டட்சரம் அவை மஹா விரியட்சரமாகும் அவற்றினுடைய மகிமையானது எப்படியெனின் பஞ்சாட்சரம் சைவனிலையென அஷ்டாட்சரம் வைணவனிலையென்றும் சைவகர்த்தவ்யம் பரமசிவமென்றும் வைஷ்ணவகர்த்தவ்வியம் விஷ்ணுவென்றும் சொல்லப்படும் ஆகையினால் பஞ்சாட்சரத்தில் இரண்டாமக்ஷரமும் அஷ்டாக்ஷரத்தில் இரண்டாமக்ஷரமுங்கூடி ராமாவென்று மந்திரார்த்தமானபடியினால் அந்த ராமமந்திரமான தாரகப்பிரமப்பொருளாகிய

செம்மைசேர் நாமந்தன்னைக் கண்களால்தெரியக்

கண்டேன்-எ-து.

வாராய்மனமே செம்மையென்றுஞ் சிரேஷ்டம்பொருந்தின இந்தராமாவென்கிற அட்சரங்களை ஒருநாளாகிய அறுபதுநாழிகைநேரத்தில் அரைநாழிகை நேரமானாலும் பத்தியோடு தன்மனதை ஒருவழிப்படுத்தி ராமாராமா வென்று செபிப்பார்களேயானால் அவர்கள் ஜென்ம ஜென்மாந்திரங்களில் செய்யப்பட்ட மகாபாதகங்களையெல்லா மகற்றிப் புண்ணியதேகம் பெற்றுக்கொள்வார் வாராய்மனமே அப்படிப்பட்ட இரண்டாமக்ஷரமாகிய மந்திராட்சரமானதை இதோ புத்திபூர்வமாய் தலையிலே என்கண்களினால் கண்டு சந்தோஷமடைந்து கொண்டேன் என்னுடைய பிராணன் பிரிந்துபோகிற அந்தியகால வேளையில்கண்டு துதித்து மோக்ஷமடைந்து கொண்டேன் வாராய் மனமே இகத்துக்கும் பரத்துக்கும் சுதந்தரப்பட்டது ஆனபடியினாலே இது ராமபாணந்தான் சந்தேகமில்லை அந்த ராமரெங்கேயென்று பார்த்துக்கொள்வேன்.

அவதாரிகை.

இப்படி இராமத்தியானத்தோடுங்கூடி மாமறையில் மறைந்து நிற்கப்பட்ட சுவாமியானவரைச் சமீபத்திலே யழைத்து வாலியானவன்சொல்லுகிறான்.

கவி.

கண்ணுற்றேனிராமநீலக் கார்முகிற்கமலம்பூத்து
மண்ணுற்றுவரிவில்லேந்தி வந்தனைபோலுமாலே
புண்ணுற்றுநயச்சோரிட்டுப் பொரியெழப்பொதியச்செய்தாய்
எண்ணுற்றாயென்செய்தா யீதென்னவியம்பிடாயே.

இதன்பொருள்.

கண்ணுற்றேனிராமநீலக் கார்முகிற்கமலம்பூத்து-எ-து.

வாராய் ராமமத்திரா மணிமகர குண்டலப்பிரபுவே ராஜாதி ராசனுகிய ஸ்ரீராமவென்னும் என்னுடைய இரண்டுநயனத்தினுலும் உன்னுடைய பாதாதிகேசம் கேசாதிவரைக்கு மகண்ட பரிபூரணமாகச் சந்தோஷித்துக்கொண்டேன் வாராய் ராமபத்திரா உன்னுடைய திருமேனியானது கார்மேகங்கவிந்து சூழ்ந்ததுபோல நீலமரகதமேனியாய் அதற்கு இடையில் செந்தாமரைப் புட்பம் பூத்ததுபோல் உன்னுடைய திருமுகம் இரண்டுகண்களும் இரண்டுகரதலங்களும் இரண்டு பாதங்களும் சிவந்திருக்கிறபடியால் கார்மேகத்துக்கு இடையில் செந்தாமரைபுட்பம் பூத்ததுபோ லிருக்கின்றது வாராய் ராமாவாராய் ராமபத்திரா.

மண்ணுற்றவரிவில்லேந்தி வந்தனைபோலுமாலே-எ-து.

வாராய் ராகவா நானுன்னை யழைத்தபோதும் மண்ணென்றும் பூமியைப் பார்த்துக்கொண்டு தலைகவிழ்ந்து என்முகம் பார்த்து வசனியாமல் நாணமுற்று என்னுடைய முன்பாகவந்து நிற்கிறுயே வாராய் ராமா உன்னிடத்தில் ஒருவசனங்கேட்கிறேன் வாராய்ராமா.

புண்ணுற்று நயச்சோரிட்டு பொரிபெழப் பொதியச்செய்தாய்-எ-து.

இதுவரைக்கும் சத்திராதிகளுடைய அஸ்திர சஸ்திரங்கள் பட்டு என்னுடையதேகம் விரணம்பட்டதினுலும் வாராய் ராமச்சந்திரா அப்படிப்பட்ட என்னுடையமார்பானதை புண்படுத்தி அந்தரணத்தினுலேயிருந்து சோரியென்றுமிறந்தப் பொடியெழும்பித் தாரைதாரையாய் ஒழுகவும் என்னுடைய சரீரமானது பதைபதைத்து துடிதுடித்துக் கிடக்கத்தக்கதாகவு மென்னுடைய நடுமார்பிலே அஸ்திரந்தொடுத்து அவ்மோசஞ்செய்யவேணுமென்று.

எண்ணுற்று மென்செய்தா யிதென்ன வியம்பிடாயே-எ-து.

இப்படி ஒருபாணந்தொடுத்து என்னைவதை செய்யவேணுமென்று விசாரித்து உன்னுடைய அயோத்தியாபுரி பட்டணத்தை சகலசம்பத்தையும்விட்டு இந்த வனவாசத்திலே இன்றைக்குவந்தாய் வாராய் ராமா எதினுலே யென்பேரில் பாணந்தொடுத்தாய் இப்படிக்குச்செயலாமோவாராய் ராமாசொல்லவேணும் வாராய்ராமபத்திரா.

கவி.

வாய்மையும் வழங்குங்காத்து மண்ணுயிற்பறந்தவள்ளல்
தூய்மையோன்மைந்தாநீயும் பரதன்முன்றேன்றினுலே
தீமைகாண்பிரரைகாத்து தான்செயிற்றீங்கன்றுமோ
காய்மையமின்றிநட்புந் தருமத்தைதழுவிநின்றாய்.

## இதன்பொருள்.

வாய்மையும் வழக்குங்காத்து மன்னுயிர்பறுந்தவள்ளல்-எ-து.

வாய்மையென்னும் பவக்கடாட்சம்பெற்று புண்ணிய கர்ம்மமான சத்தியத்தையும் ஈஸ்வரப்பிரீதியான தர்மத்தையுங்கைக்கொண்டு தெய்வானுகூலமில்லாத பாவகர்மமான அசத்தியத்தைத்தள்ளி நரகவாதனைக் கேதுவான அதர்மத்தைக்கடிந்து தன்னுயிர்க்கிரங்கி தன்னுடைய சுகதுக்கம்போலவே அன்னியனுடைய சுகதுக்கமென்றறிந்து பேதாபேதமில்லாமல் புண்ணியபாபத்தினுடைய கொள்கையறிந்து மனுநீதிதவராமல் ராச்சியபரிபாலனஞ்செய்த வள்ளலாகியசிரேஷ்டதாரியா யிருக்கின்ற.

தூய்மையோன் மைந்தாநீயும் பரதன்முன்றோன்றினாயே-எ-து.

ஓய் ராமா தூய்மையென்கிற கர்த்தத்துவமாகிய தசரத மஹாராஜனுடைய மூன்றுபேர் பாரிமாருக்கும் நான்கு புத்திரர்களாக வந்து உற்பவித்தவர்களில் உன்னுடன்பிறந்த தம்பியான பரதனுக்கு முன்பிறந்த ஸ்ரீராமபத்திரரான ராமா உன் தம்பி பரதனுக்குண்டான சத்தியமானது உன்னிடத்தில் சற்றாகிலுமில்லையே வாராய் ராமா அதுவுமல்லாமல்.

தீமைதான்பிறரைக்காத்து தான்செயிற்றீங்கன்றோமோ-எ-து.

தீமையென்று சொல்லப்பட்ட பொல்லாத துன்மார்க்கங்களையாதாமொருவர் செய்வார்களேயானால் அந்தத்துஷ்டர்களைச் சங்கரித்து சிஷ்டர்களை ரட்சிக்கப்பட்ட மகாராசனாகிய ஸ்ரீராமாநீ இப்படிமறைந்துநின்று சதிமோசமாகச்செய்த காரியத்தைக்குற்றமென்று சொல்லமாட்டார்களோ நீ பெரியவனாகில் உன்னைக் கேட்கிறபேர்களில்லையென்றோ விசாரித்துகொண்டாய் வாராய் ராமா யிதைவிசாரித்து பார்க்கிறபோது.

தாழ்மையென்று சொல்லப்பட்ட தயவுதாட்சண்யம் ஈவு இரக்கமென்று சொல்லாநின்ற சன்மார்க்க மொன்றுமில்லாமல் அன்பு ஆசாரமில்லாமல் முப்பத்திரண்டு தர்மத்தைப் பரிபாலனம் செய்யப்பட்ட நீ இந்த அநீதஞ்செய்யலாமோ வாராய் ராமா யானென்னகுற்றஞ்செய்தேன் அதைச்சொல்லவேணும் வாராய்ராமபத்திரா-எ-று.

### கவி.

இல்லரந்துறந்ததம்பி பெங்களுக்காகத்தங்கள்
வில்லரந்துறந்தவீரந் தோன்றலால்வேதநன்னூல்

சொல்லரந்துறந்தில்லாத சூரியன்மரபிற்றெல்லோர்
நல்லரந்துறந்ததென்ன நகைவரநாணினேனே.

இதன்பொருள்.

வாராய் ராமபத்திரா நீயும சகலமான விசேஷங்களை யறிந்திருந்தும் நிர்மூடரைப்போல் இப்படி அடாத காரியஞ் செய்யலாமா வாராய் ராமா இந்த லோகத்திலுள்ள எல்லோரும் இல்லறமென்றுந்துறவரமென்றுஞ் சொல்லப்பட்ட இரண்டுதர்மத்திலொன்றாகிலும் சாதிக்கவேண்டும் அதில் இல்லரமென்பது கிரகமாதா பிதா பசுபத்தினி சுதர்மத்திராதனம் தானியம் நிலம்சலம் அடியார்சம்பத்துடனே வர்ழ்வது கிரகஸ்தாச்சிரமமென்கிற இல்லரம் இப்படி இல்லறவாழ்க்கையி லிருந்து பிரவிர்த்தியினாலே வளருகிற செல்வம்வளரத் தனதானிய சம்பத்துகளை மென்மேலும் சம்பாதித்து தர்மதானங்கள்செய்து சுத்தம் சுசிகரத்துடனே நித்திய அனுஷ்டானவிபூதி பூசைகளை முடித்து ஈதலிரக்கந் தயைதாட்சண்யத்துடனே சத்தியதர்மத்தோடும் பாரிபோடும் கூடிவாழ்ந்து புராணசாஸ்திரங்களை யுணர்ந்து பொருமையுடனே யிருந்து அவிவேகத்தைத் தள்ளி தெய்வபக்தியுடனே தெய்வ தெரிசனஞ்செய்து தெய்வபூசை விருந்தூட்டல் பாபங்களைக்காத்தல் முதலிய நற்குணமுடையவனாய் தானும் அறுசுவையுடனேபொசித்து அலங்காரவஸ்திரமணிந்து இஷ்டானுபோகம் அனுபவித்துப் .பெரியோரிடத்தில் அன்புவைத்துச் சற்குண சாவகாசஞ் செய்து தெய்வபக்தியுடனும்குருபக்தியுடனும் பாத்திரங்களையறிந்து தர்மஞ் செய்து தயிரியத்துடனுஞ் சந்தோஷத்துடனும் வாழ்கிற இல்லறவாழ்க்கையினாலே சிறிது தர்மங்கள் லபிக்கும் துறவரமோவெனில் இந்த இல்லறவாழ்க்கையைவிட்டும் புறச்சார்புகள் புண்ணியஸ்தலங்களிற் சஞ்சரித்தும் புண்ணியதீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்தும் விசேஷதெய்வீகங்களைத் தெரிசனஞ்செய்தும் அல்லாமலும் நிராசையுடனே சுகபோகங்களைவிட்டு மரவுரிதரித்து வனாந்திரங்களிலே சஞ்சரித்துக்கொண்டு மஹாத்துமாக்களைத் தரிசனஞ்செய்து கிரியோகங்களினால் தபஞ்செய்தும் வருகிறபின் புண்ணியந் துறவறமென்றுஞ் சொல்லப்படும் நீயோவென்றால் உன்னுடைய வாழ்க்கையான நாடு இராஜ்ஜியம் மாதாபிதாக்கள் அரண்மனை ஆஸ்தானங்கள் திரவியங்கள் மந்திரி பிரதானிகள் முதலிய சேனாசைனியங்களையும்

சகலபாக்கியத்தையும் விட்டு சடைமுடிதரித்து வற்கலையாகிய மர வுரிதரித்து பதினாலுவருஷம் தபசுசெய்யும்படி வந்திருக்கிறாய் ஓய் ராமா உன்னுடைய கிரகவாழ்க்கையிலிருந்து சம்பாதிக்கப்பட்ட தர் மமும்போயிற்று கலவரமான தபசுசெய்துவரப்பட்ட தர்மமும்போ யிற்று அதெப்படியெனில் என்தம்பியாகியசுக்ரீபனும் நானும் மனக் குரோதத்தினால் போர்செய்கிறபோது நீயொருவன் தர்மசிந்தையு ள்ளவனாகி மத்தியஸ்தனாய்வந்தது உண்மையானால் எங்களிரண்டுபே ரையும் பேதாபேதமில்லாமல் ஒருவன்பேரில்பட்சமும் ஒருவன்பே ரில் அபட்சமும்வைத்து விசாரித்தாய் ஆதலால் தபசுசெய்துவரப்ப ட்ட உன்னுடையமனதை அசையாவிளக்குபோல் ஒருநிலையாய் நிரு க்காமல் என்பேரில் தபசினால்வரப்பட்ட தர்மமும் போய்விட்டது வாராய்ராமா ஒருவிருட்சத்தில் மறைந்துநின்று சதிமோசமாகஎன் னைக்கொன்றதினால் உனக்குச் சாமார்த்தியம்வருமோ மிகுந்தசாமர் த்தியவானென்று சொல்லிக்கொள்வார்களென்று விசாரித்தோ இந் தமோசம்செய்வதாய் வாராய்ராமா சத்தியலோகத்தி லெழுந்தருளி யிருந்து சர்வயோனிகளாகிய சீவாத்மாக்களையும் அகாரமந்திரத்தி னால் சிருஷ்டிக்கப்பட்ட பிரமதேவருடைய நான்முகத்திலிருந்து இ ருக்குவேதம் அதர்வணவேதமென்று சொல்லுகிற நான்குவேதங் கள்பிறந்தன அதினின்றும் மந்திரம் வியாகரணம் சந்தோநிஷத்து சநிவேடு நிருத்தம் ஜோதிஷமென்று சொல்லப்பட்ட ஆறுசாத்திர ங்களுமுண்டாயின அந்தசாஸ்திரங்களிலிருந்து சைவம் பௌஷிதம் பிரமாண்டம் காருடம் நகாரம் வைணவம் பாகவதம் ஆக்கினேயம் பிரமகைவர்த்தனமென்று சொல்லப்பட்ட பதினெண்புராணங்களும் பிறந்தன இப்படி வேதசாஸ்திரபுராணங்களி லிருந்துதெரிந்து ஆரா ய்ந்தெடுத்து மனுநீதிசாஸ்திரங்களை கற்பிக்கப்பட்டன அப்படிகற்பி த்தவர் உன்னுடையமுதாதையான வைவச்சுதமனுவல்லவோ ஆன படியால் ஓய்ராமா.

வேதநன்னூல் சொல்லறந் துறந்திலாச்சூரியன்
மாபிற்றல்லோர்-எ-து.

முன்சொல்லப்பட்ட ராசதர்மமாகிய மனுநீதிசாஸ்திரத்திற்சொ ல்லியிருக்கின்ற மார்க்கந்தவறாமல் ராச்சியபரிபாலனஞ் செய்யப்பட்ட வர்களாகும் உன்னுடையபெரியோர்களான சூரியகுலத் திராசாக்கள் அப்படியிருக்க ஓஓ ராகவா.

நல்லரந்துறந்தென்ன நகைவரவாணினேனே-எ-து.

உன்பெரியோர்கள் செய்யப்பட்ட நன்மார்க்கமான தர்மநீதந்து றந்து அதர்மமாகக்கொண்டு மறைந்துநின்று நீ அஸ்திரந்தொடுத்த காரணம் யான்விசாரித்துப் பார்க்குமிடத்தில் எனக்குத்தானே புன் சிரிப்புவருகின்றது உன்முகத்தைப்பார்த்து வர்ணிக்கிறதற்கு எனக் குத்தானே நாணமாயிருக்கிறது ஓய்ராமா இந்தக்காரியம் லச்சையி ல்லாமற் செய்தபோதே நீமகா நல்லவனென்றும் அறிந்துகொண் டேன்-எ-று.

கவி.

அரக்கனோரழிவுசெய்தா லருவனோவதற்குவேறோர்
குரங்கரசினைக்கொல்லென் றுன்மனுநெறிகூற்றுண்டோ
இரக்கமெங்குற்றுயென்மே லெப்பிழைகண்டாயையா
புரக்கருவிதுநீபூண்டாற் புகழையார்பரிக்கர்பாலர்.

இதன்பொருள்.

அரக்கனோரழிவுசெய்தாலழிவனோவதற்குவேறோர்-எ-து.

வாராய்ராமா நான்சொல்லப்பட்ட ராட்சதகெம்பீரனாகிய இரா வணனானவன் சற்றுநினையாமல் நீசிரியவில்லை யொடித்து அக்கினி சா ட்சியாக வலதுகைதொட்டுப் பாணிக்கிரகணஞ்செய்யப்பட்ட சீதாதே வியைக் கபடநாடகஞ்செய்து உன்னையும் உன்தம்பியையும் வேறுபடு த்தி யெடுத்துக்கொண்டுபோனான் அந்தப்பாதகன்செய்த அதற்குநீயு ம் மானபுருஷனானால் அந்தராவணனுடன்போர்செய்து தேவியைமீட் கவேண்டு மில்லாமற்போனால் அவன்கையிலே நீயுமிறக்கவேண்டும் இவ்விரண்டிலொருகாரியமுஞ்செய்யாதபடிக்கு.

குரங்கரசினைவெல்லெனுமனுநெறி
கூறிற்றுண்டோ-எ-து.

குரங்கென்னும் வானரசைனியங்களுக்கு ராசாவாகிய கிஷ்கிந் தாபுரிக்கு அதிபனாயிருக்கிற என்னைக்கொல்லவேண்டுமென்று உன் னுடைய மனுவிக்கியானதர்மத்திலே சொல்லியிருக்கிறதோ வாராய் ராமா இதற்குஉதாரணம் நீயேசொல்லவேண்டும் ஓய்ராகவா.

இரக்கமெங்குற்றுயென்மே லெப்பிழைகண்டாயையா-எ-து.

நீநல்லபுத்திசாலியானால் ஈவுஇரக்கம் தயவுதாட்சண்ணியமென் னுந்தன்மையான குணமலவோயோக்கியம் இந்தச் சற்குணங்களை என்விட்டுவிட்டாய் ஓய்ராமா அதுதவிர என்பேரிலென்னகுற்றங்கண் டாய் அல்லது உனக்கானாலும் ஒருகுற்றங்குறைபாடுகள் செய்ததுண் டோ நீசொல்லவேணும ராமபத்திரா.

புரக்கழிவதுநீபூண்டாற் புகழையார்பார்க்கர்பாலர்-எ-து.

சகலரும் இகழ்ச்சியாகப் பரிகாசஞ் செய்யப்பட்ட தீமையான காரியத்தை மகாபிரபலமாய்க்கொண்டு மறைந்து என்பேரில் பாணந் தொடுத்தபடியால் உன்னுடையசிருஷ்டிக்கு இழிவேயன்றி புகழுங்கீர்த்தியுமாகியபராக்கிரமத்தை எவர்கள் துதிப்பார்கள்-எ-று.

கவி.

கோவியற்றருமமுங்கள் குலத்துதித்தோர்கட்கெல்லாம்
ஓவியத்தெழுதவொண்ணு வுருவத்தையடையவையா
ஆவியச்சனகன்பெற்ற வன்னத்தையமுதின்வந்த
தேவியைப்பிரிந்தபோதே திகைத்தனைபோலுஞ்சித்தம்.

இதன்பொருள்.

கோவியற்றருமமுங்கள் குலத்துதித்தோர்கட்கெல்லாம்-எ-து.

வாராய்ராமா ஒகோவென்ராச்சியத்தை ஆளுகிறதற்கு இயல்பாகக்கொண்டிருக்கப்பட்ட தருமநீதத்தோடே சாஸ்திரவிதி வழுவாமல்ராச்சியபாரஞ் செய்யப்பட்ட உன்னுடைய சூரியகுலவமிசம் உண்டான உற்பத்தியைச் சொல்லுகிறேன் எப்படியென்றால் ஆதரங்கதிரோடுங்கூடிப் பகற்காலங்களிலே லோகத்தைவிளங்கச் செய்யப்பட்ட சூரியபகவானுக்குச் சங்கையென்றும் இராக்கினியென்றும் பிரபையென்றும் சாயாதேவியென்றும் நாலுபெண்சாதிமார்களுண்டு அவர்களில் சங்கைமகன்வைவசுதன் வைவசுதன்மகன் கட்டுவாங்கன் கட்டுவாங்கன்மகன் விருக்கு விருக்குமகன் சுயோதனன் சுயோதனன்மகன் அபிரகன் அபிரகன்மகன் வசுவகன் வசுவகன்மகன்கட்டுவாங்கன் கட்டுவாங்கன்மகன் மித்திரன் மித்திரன்மகன் உபஞச்சுவன் உபஞச்சுவன்மகன் அச்சுதன் அச்சுதன்மகன் அச்சுபதி அச்சுபதிமகன் பிரகதாசுவன் பிரகதாசுவன்மகன் சுவர்ணன் சுவர்ணன்மகன் பிர்மோதி பிர்மோதிமகன் அரிச்சுவணன் அரிச்சுவணன்மகன் நிகும்பன் நிகும்பன்மகன் சம்புவாட்சவன் சம்புவாட்சவன்மகன் வருணாட்சுவன் வருணாட்சுவன்மகன் மாந்தாதா மாந்தாதாமகன் அம்பரீசன் அம்பரீசன்மகன் ரதாசுவன் ரதாசுவன்மகன்திரிசிபதன் திரிசியதன்மகன் விருத்தராசன் விருத்தராசன்மகன் பிரகதாசுவன் பிரகதாசுவன்மகன் வசுமனு வசுமனுமகன் திரிதனு திரிதனுமகன் சூரியவருணன் சூரியவருணன்மகன் திரிசங்கு திரிசங்குமகன் அரிச்சந்திரன் அரிச்சந்திரன்மகன் லோகிதாசன் லோகிதாசன்மகன் துந்தன் துந்தன்மகன் விசையன் விசையன்மகன் காருகன் காருகன்மகன் பிரு

கராசன் மிருகராசன்மகன் வாகுராசன் வாகுராசன்மகன் சகரராசன் சகரராசன்மகன் அசமஞ்சன் அசமஞ்சன்மகன்திலீபராசன் திலீபராசன்மகன் பாகீரதன் பாகீரதன்மகன்குலுகன் குலுகன்மகன் சிந்துதீபன் சிந்துதீபன்மகன் அயதாயு அயதாயுமகன் ரிதுபர்னன் ரிதுபர்னன்மகன் உதரராசன் உதரராசன்மகன் மித்திரசேனன் மித்திரசேனன்மகன் அசுமகன் அசுமகன்மகன் நகுலன் நகுலன்மகன் தயாதனன் தயாதனன்மகன் அதிரதன் அதிரதன்மகன் தசரதன் தசாதன்மகனுகிய ஒய்ராகவா இப்படிவைவச்சுமனு மாந்தாதாமுதல்தசரதனீருகக்கொண்டுவாழப்பட்ட ராசாக்களையும் பார்க்கிறபோது.

ஓவியர்க்கெழுதவொண்ணு வுருவத்தையடையவையா-எ-து.

ஓவியரெனும் சித்திரக்காரருக்கு எழுதுகிறதற்குஅரிதான ரூபலாவண்ணியம் பொருந்தினவனுகிய ராமபத்திரா நீயோவென்ருல் சகலசாஸ்திரங்களையும்வாசித்து நன்மை தீமை குணம் தோஷம் பாவம் புண்ணியக்கீர்த்தி அபகீர்த்தியென் றிப்படிச்சொல்லப்பட்ட காரியாகாரியங்களுடைய கிருத்தியாகிருத்திய மறிந்திருக்கிற விவகாரஸ்தன் அப்படியிருக்கஇந்தத்துன்மார்க்க மெதனுலே செய்தாயென் றுஆலோசிக்குமிடத்தில்.

ஆவியைச்சனகன்பெற்ற வன்னத்தையமுதின்வந்த

தேவியை-எ-து.

ஆவியென்றுசொல்லப்பட்ட உன்னுடைய பிராணனுக்குச் சமானமாகிய பிராணநாயகியானவளும் அன்னம்போல் நடக்கப்பட்டருடையையுடையவளும் சனகருசன்பயின்றுவளர்க்கப்பட்ட புத்திரியும்முற்காலத்திலே தேவாதிகளை யிரட்சிக்கும்பொருட்டு தெய்வகதியையுண்டுசெய்யத்தக்கதாக விஷ்ணுவானவர் மந்திரகிரியை தன்கையினுலெடுத்துவந்து திருப்பாற்கடலில் நிறுத்தி வாசுகியென்னும்பாம்பை கயிருகப்பூட்டி தன்கையினுல் கடைந்தபோது முதலாவது தெஷ்டாதேவியாகிய மூதேவிபிறந்தாள் இரண்டாவது பிறச்சாயையான பருசத்தியம்மைதானே லட்சுமிதேவியாகப் பிறந்தாள் அந்த அம்மனை நாராயணர் தமக்குப் பாரியாக மார்பிலே தரித்துக்கொண்டார் அந்த லட்சுமிதேவியானவள் உலகத்தில் துஷ்டரான ருட்சதர்கள் குழிந்து சற்படனுபாகையைச் செய்கிற படியால் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ் செய்து இப்பூமிபாரந் தீர்க்கவேணுமென்று குசலத்துசனென்னும் பிராமணனுக்கு மகளாகிய வேதவே.

தியென்னும் பெயருடையவளாகப் பிறந்து தபசுசெய்கிறபோது ராவணனுடைய உபத்திரவத்தினால் இடரடைந்து அக்கினியில்முழுகி மூன்றுவது சனகனுடைய வேள்வியில் சீதையென்றும் சானகியென்றும் நாமதேயம் பெற்று வாழப்பட்ட ஸ்ரீதேவியை.

பிரிந்தபோதே திறகத்தனைபோலுஞ்சித்தம்-எ-து.

இப்படிப்பட்ட தெய்வதத்துவம் பொருந்திய சிலாக்கியத்தையுடைய உன் தர்மபத்தினியாகிய சீதாதேவியை ராவணன் திருடிக்கொண்டு போனபடியால் சீதாதேவியானவள் உன்னைப்பிரிந்து வேறுபட்டாள் அதனால் உன்னுடைய அந்தகாரணமர்ன சித்தவிழித்திகளெல்லாம் பேதாபேதமடைந்து யோசனையில்லாதபடிக்குத் தயிரமில்லாமல் துராசாரமாக ஒருவிருட்சத்தின் சார்பிலேநின்று ஒளித்திருந்து பாணந்தொடுத்து என்னை வதைசெய்தாய் வாராய் ராமா இப்படிக்கெல்லா மோசஞ்செய்யலாமா வாராய்ராமபத்திரா அதுவுமல்லாமல்இன்னமும் ஒருவார்த்தை கேட்கிறேன் வாராய் ராமா-எ-று.

கவி.

கூட்டொருவரையும்வேண்டாக் கொற்றவர்பெற்றதாதை
பூட்டியசெல்வமங்கோர் தம்பிக்குக்கொடுத்துபோந்தாய்
நாட்டொருகருமஞ்செய்யத் தம்பிக்குன்னரசுநல்கிக்
காட்டொருகருமஞ்செய்தாய் கருமந்தானிதன்மேலுண்டோ.

இதன்பொருள்.

கூட்டொருவரையும் வேண்டாக் கொற்றவர்பெற்றதாதை-எ-து.

கூட்டென்னும் உனக்கு பந்தமாயிருக்கிற மாதாபிதா சகோதரர் பந்துகள் குரு தெய்வம் மந்திரி பிரதானி ஆமாத்தியர் பாக்கியம் நாடு ராச்சியம் அரண்மனை ஆஸ்தானம் களஞ்சியம் குலம்மணிமண்டப முதலிய சகலபாக்கியங்களையும்விட்டுச் சந்நியாசி மார்க்கமாகத் தர்மசிந்தனையோடு தபசுசெய்யவேண்டி வரப்பட்ட கொற்றமென்னும் சவுரிய சாமார்த்தியம் பொருந்தியவனான ஒய்பகவா புத்திர உற்பத்தியில்லாத சந்தற்பத்தினால் அனேகநாள் மனோதுக்கத்தையடைந்து புத்திரகாமேஷ்டியாகஞ்செய்து அந்த ஏதுவினால் அருமையோடுகூடிப் பயின்றுவளர்க்கப்பட்ட உன் தந்தையான தசரதமகாராசாவானவர் உன்னுடைய ஆந்தியபுத்தி விசேஷத்தைக்கண்டும் பத்திவிசுவாசபோதத்தைக்கண்டும் சவுரியரூபலட்சணங்களை கண்டும் தனுசாஸ்திர வல்லப சாமர்த்தியத்தைக்கண்டும் உனக்குச் சிசுப்பிராயம் போய் கவுமாரப்பிராயம் கழித்துபாலியப் பிராயமான பருவத்தைக் கண்டு சந்தோஷித்து ராச்சியபரிபாலனம் செய்விக்கவேணுமென்று

வசிஷ்டர் வாமதேவர் முதலான குருசிரேஷ்டரிடத்திலேயும் சுமந்திரன் முதலான மந்திரிமார்களோடு மாலோசித்து அவர்களைச் சம்மதஞ்செய்து.

பூட்டியசெல்வமங்கோர் தம்பிக்குக்
கொடுத்துப் போந்தாய்-எ-து.

ஈழம் பாண்டியாழ்ப்பாணம் சேரம் சோழம் கொங்கு வங்காளம் குந்தம் மகதம் சீனம் குச்சாரம் மராடம் ஆரியம் கர்னாடம் துளுவம் யங்களம் துலுக்காணம் அவந்தி தேசம் வடமதுரை சிந்துபாஞ்சாலம் ஜோனகம் டில்லி நிடதம் கேகயம் சவுராஷ்டிரம் அங்கம் மிதுலை தன்னேசி காம்போதி காம்பிலி நேபாளம் கங்கலா ஒட்டதேசம் உகாந்தரதேசம் கனலிங்க ராச்சியம் பப்ரதேசம் பல்லவதேசம் பவுண்டராச்சியம் கோசலாபுரி சேதுராச்சியம், அனந்தபுரி அஸ்தினபுரி குச்சிலியதேசம் மச்சதேசம் மாயாபுரி விருத்தபுரி சாமந்தபுரி சாகோளம் வைகாசபுரி காவிதராச்சியம் சோனைநாடு கொல்லாபுரிதேசம் கேதாரிபுரம் பஞ்சகராச்சியம் ஆண்டவதேசம் மிதுலபுரி வீரகோளம் அயோத்தியாபுரி முதலான ஐம்பத்தாறு ராச்சியத்து ராஜாக்களையும வரவழைத்து ராச்சியத்தை அலங்காரஞ் செய்து அதுவுமல்லாமல் மகரதோரணம் தமனியமாலை பச்சைதோரதம் சன்னற்பந்தி சொர்னதோரணம் செந்நெற்குலை செய்யற் கொடி சிங்கக்கொடி அரம்பை நிரை பூசுவிலாச முதலிய பலபல அலங்காரஞ்செய்துசாந்து சந்தனம் நிறைத்து தூபம்வளர்த்திப் பட்டணுவாசிகள்நகரமாக்கள்சூழவே வேதப்பிராமணர் அருமை முனிவர் வேதகோஷ்டந்தொனிக்கக் கங்கை யமுனை கன்னியாகுமரி கோதாவிரி நன்மைக்காவேரிநதிவிபாதை தர்க்கைகிருஷ்ணவேணி விந்தை வேதநதி இருஷிகை தவசிரை துங்கபத்திரி சுசோபனைதொலையலோகிதையுந்திகிரோதை பூகோளை அமுதபாளை சந்திரபாகை சாம்புவந்திபவானிசரயுநதி சக்கரநதி பொன் முதலிய முதலான திவ்வியதீர்த்தங்களைக்கொணர்ந்து இன்னமும் தெய்வரதம் வேதரதம் மகாரதம் புஷ்பரதம் சமரதம் வீரரதம்ராகுதுண்டம் வசியதுண்டம் சூகரதம் சகடதுண்டம் பூகரதம் அசுவரதம் சித்திரதேர் வரத்தினதேர் பாதாளசையும்சக்கிந்ததேர் இந்திரவிமானம் இப்படிச்சொல்லப்பட்ட ரதங்களைச் சோடித்து அணியணியாகநிறுத்தி அதுவுமன்றி வார்ய்ராமா ராஜ குமாரர்கள் வந்துசூழ்ந்து உன்னை மஞ்சனமாட்டிப் பீதாம்பர வஸ்திர முடுத்திப்பரிமள சுகந்தங்களை யணிந்து குட்கிரீடம் மகிமபுரி பதக்கம் ஆரம்

கண்டிகை அரை அங்கதம் வாகுவலயம் மகரகுண்டலம் கங்கண கடகம் அரப்பாடிகைளுாண் இடம்புரி வலம்பு வச்சிர்மாலே நவரத்தினத் தொங்கல் தாழ்வடம்சொர்னஜவுளிமரகதமாலே மின்கைச் சவரிவளை அஸ்தகடகம் விரலாழிபுட்பராக ரத்தனகவசம் பாததண்டைவீரகண்டாமணி விரல்மோதிரம் இப்பேர்ப்பட்ட ஆபரணாதிகளேயணிந்துபேரிகைரணபேரிகை ராயபேரிகை ராசகிடுமேடி உடுக்கைமணிவீராணன் தாரைசின்னம் சங்குதாளம்டமாரம் கனகதப்பு சங்குமுரசுவீரமுரசு வீரமத்தளம் வீரதுந்துமி தவண்டைமல்லரி தம்புருவீணை தக்கபூரிகைதாளம் குறடு ஆடகபட்சம் ஆடகபாணிமக்காளம் நாககரம் ஊது குழல் துத்தாரி டமாரிகம்கரி கடுந்துடி உறுமிதாகை அமலவண்டை மல்லாரி ரேணுசிறுபறைகொம்புதாள சரமண்டலமிப்படிச்சொல்லப்பட்ட வாத்தியகோஷ்டம் முழங்கத்தக்கதாக திவ்வியமானநரகஸ்திரீகள்வந்து சங்கீதநிர்த்த பரதநாட்டியம்நடக்க நாகரத்தின கசிதமான மண்டபத்திலே தேவாதிமுனிவர்கள் சந்தோஷிக்கத் தக்கதாக அபிஷேக கோலத்துடனே வெண்கொற்றக்குடைபிடித்து வெண்சாமரை ஆலவட்டந்துலங்க முன்னும்பின்னும் ஆயுதவாகனசாதனத்துடனே துரைமகள் தளகர்த்தர் கருணீகர்பிரபுக்கள்புடைசூழ இப்படிப்பட்ட ப்ரபலமாகிய அதிசயவிசேஷ அலங்காரத்தோடே பட்டணம்பிரவேசம்வந்து பட்டாபிஷேகமுடி சூடுஞ்சமயத்தில் அவற்றையெல்லாம் உன்தம்பி பரதாழ்வானுக்கு கொடுத்துவிட்டு வற்கலேயுடுத்தி மரவுரி சடைமுடிதரித்துங் காய்கனி கந்தமூலபலாதிகளேப் பொசித்து விரகம்பூண்டு வனதீட்சையாய் வரப்பட்ட ஒப்ராமா-எ-று.

நாட்டொருகருமஞ்செய்யத் தம்பிக்குன்னரசுநல்கி-எ-து.

நாடென்று சொல்லப்பட்ட உன்னுடைய ராச்சியத்தில் உனக்கு வரப்பட்ட ராச்சியபாரத்தை உன்தம்பியான பரதனுக்குக் கொடுத்து வனசஞ்சாரத்துக்கல்லவோ வந்தாய் வாராய் ராமா இவ்விடத்தில் தபசுசெய்ய வந்தவிடத்திலும் நீகெட்டதுமல்லாமல் என்னுடைய ராச்சியபாரத்தையும் என்தம்பி சுக்ரீவனுக்குக் கொடுத்தது,

காண்டொருகருமஞ்செய்தாய் கருமந்தா
ணிதன்மேலுண்டோ-எ-து.

காடென்றும் வனவாசத்திலேவந்து என்னையுங் கெடுத்தாயே வாராய்ராமா இதைப்பார்க்கிலும் ஒரு துஷ்டகருமம் நீசெய்யவேணுமோ வாராய் ராமா சற்று விசாரியாமல் என்பேரிலே அஸ்திரந்தொடுக்கலாமோ இதற்கு மறுவசனஞ்சொல்லவேணும் ராமா,

இருவர்போர் பொருந்துங்காலை யிருவருநல் லுற்ருரே
ஒருவன்மேற் கருணைதூண்டி யுருவம்வேறொளித்துநின்று
வரிசிலை குழைகள்வாங்கி யம்பொன்றுமருமத்தெய்தாய்
தருமமோ பிரிதொன்ருமோ தகைவிலாதெனினும்பக்கம்.

இதன்பொருள்.

இருவர்போர்பொருந்துங்காலை யிருவருநல்லுற்ருரே-எ-று,

இருவரென்று சொல்லப்பட்ட யானும் சுக்ரீபனுமாக அவிவேகத்தினுல் வானரஜாதியானபடியினலே மனக்குரோதங்கள் வைராக்கியம் பிறந்து நீபெரியவன் நான்பெரியவனென்று அகந்தைகளினலே போர்செய்கிற சமயத்திலே நீயொருவன் குலசிரேஷ்டன் சாஸ்திரக்கியானன் கீர்த்தியிலே சிலாக்கியன் சகல காரணத்திற்கும் மகாயோக்கியன் தருமநீதியுள்ளவன் ராசாதிக ளிரண்டுபேரையும் வருவித்து குற்ருகுற்றங்கள் விசாரித்து சிட்சாட்சியை செய்ததல்லோ உனக்கு ராஜதர்மம் வாராய் ராமா என்னுடைய குலசாரம் சற்ருகிலும் விசாரியாமல்.

ஒருவன்மேற் கருணைதூண்டி யிரவும்வே றொளித்து நின்ருய்-எ-று.

ஒருவனுன சுக்ரீபன்பேரில் பட்சம்வைத்து என்பேரில்கொஞ்சமாகிலும் கருணையில்லாமல் நிந்தனையாகத்தள்ளி உன்னுடைய சரீரத்தை மறைத்து ஒருமரத்திலே ஒளித்துநின்று மதிமோசமாக.

வரிசிலைகுழைகளாக்கி யம்பொன்று மருமத்தெய்தாய்-எ-று.

வரித்துக்கட்டுடைத்தாகிய பாரகோதண்டமானதை வளைத்து மகாகூர்மையுடைய ராமசகாயமான அஸ்திரத்தை ஞானவாயிலேபூட்டி என்னுடைய நடுமார்பிலே வஞ்சனுர்த்தமாக தொடுத்தாயே வாராய் ராமா இதைவிசாரித்து பார்க்கிறபோது.

தருமமோபிரிதொன்ருமோ தகைவிலாதெனினும்பக்கம்-எ-று.

உன் மூதாதைமார்களுடைய தர்மநீதியானது குறையாத சூரியகுலத்திலே சிபிச்சக்கிரவர்த்தியானவர் இராச்சியபாரம் செய்கிற காலத்திலே வனந்தரத்தில் ஒருவேடனனவன் ஒருபுருவைக்கன்னிவைத்துப்பிடிக்கத்தூங்கினபோது அதுவன்னியிலேஅகப்படாமல்பறந்துபோகவும் அதைவிடாமல் வேடன் துரத்தவும் இப்படிக்குச் சாயங்காலம்வரையும் வேடன் புருவைவிடாமல் துரத்தின படியினலே அந்தப்பறவையானது இந்த வேடன் தன்னை விடானென்று கருதிச் சிபிச்சக்கிரவர்த்தியானவர் ஆஸ்தானிபுரியிலே சிங்காதன பதியாக மந்திரிமார் பிரபுக்கள் சூழ்ந்திருக்கிற சபையிலே புரந்துபோய் அவ

ருடையமடியிலேசென்று இருந்தபோது அதைக்கண்ட ராசாவானவர் இது அடைக்கலப்பொருளாகுமென்று அபயங்காத்தருளினர்.

அப்போதுவேடனானவன் அரண்மனைவாசலிலே கட்டுங்காவலுங்கடந்து ராசாவின் முன்பாகச்சென்று வாராய்சுவாமி இந்தப்பறவையானது இன்றுமுழுதும் என்னைத் தப்பித்துக்கொண்டு அலையவைத்தபடியினாலே இந்தப் பறவையை யெனக்குப் பட்சிக்கத் தரவேணும் இதைவிடாமற்போனால் என்சீவனையும்மிடத்திலே மாய்ப்பேனென்று வேடன் சொன்னான் இந்த வார்த்தையைக்கேட்டு வேடனுக்கு வேண்டிய் உபசாரஞ்சொல்ல அப்பா உனக்குவேண்டிய மாமிசங்கள்தருகிறோம் திரவியங்கள் தருகிறோம் அடைக்கலப் பொருளை மாத்திரம் உன் கையிலே கொடுக்கலாகாதென்று வெகுவாகச் சொல்லினர் இப்படி நல்லவார்த்தைசொல்லியும் கேளாதபடியினால் பின்னும் அந்தப் புராவானது வந்திருக்கப்பட்ட இடமாகிய வென்னுடைய தொடையை யறுத்துத்தருகிறேனென்றுசொல்லி அவனைச் சம்மதப்படுத்தி தராசையெடுத்துப் புறாவையொருதட்டிலேவைத்து நிறுத்தியபோது நிறையேறாமல்குறைந்தது மேலும் அந்தத் தொடையின்புறத்திலேயுண்டான சதையெல்லாமறுத்து நிறுத்தபோதும்நிறையேறவில்லை அரசன்சத்தியவாசகனானபடியாலே சரீரத்தின் எலும்பைவிட்டு மாமிசத்தையெல்லாம் அறுத்துவைத்து நிறுத்துக்கொண்டு வேடனைச் சம்மதப்படுத்தி புறாவையுங்காத்தருளி லோகத்திலே கீர்த்தியை நிலைநிறுத்திக்கொண்டார் வாராய் ராமா அப்படியே உன்னுடைய முன்னோர்கள் தானதருமங்கள்செய்து மோட்ச மடைந்திருக்கிறபடியினாலே அந்தக்குலத்திலேபிறந்து மகாவல்லவனான நீ சுக்ரீபனையும் என்னையும் பேதாபேதம் விசாரித்துச்செய்யாமல் ஒளிபாணந்தொடுத்து என்னைக் கொல்லுகிறது உனக்குத் தருமந்தானோ வாராய் ராமா மேலைக்கு நன்மைவருமோ வாராய் ராமா எந்தவிதத்திலும் என்னைக்கொன்றதினாலே வேறே சிறிதுகாரியம் உனக்குக் கைவசமாகுமோ எதினாலே இந்தக்கொடுமையைச்செய்தாய் மறுவார்த்தை சொல்லவேணும் வாராய் ராமா-எ-று.

கவி.

நூலியற்கை நுங்குலத்துந்தையர்
போலியற்கையுஞ் சீலமும்போற்றலை
வாலியைத்தடுத் தாயடல்மன்னர்நம்
வேலியைப்பறித் தாய்விரல்வீரனே.

இதன்பொருள்.

நூலியற்கையு நுங்குலத்துந்தையர்-எ-து.

வேதசாஸ்திரபுராணத்திலேயாராய்ந்து சத்தியதர்மத்தையறிந் தெடுத்துப் பாவபுண்ணியங்களையோர்ந்து உன்னுடைய சூரியகுலத் திலேயுற்பவிக்கப்பட்ட வைவசுதமனுவானவர் கற்பிக்கப்பட்ட மனு நீதியான ராசதருமமுடையவராய் ராமா அந்த சாஸ்திரவிதி தவறாத படிக்கு உன்னுடைய பெரியோர்கள் அரசாண்டு குடிகளை இரட்சித் து வந்தார்கள் வாராய்ராமா.

போலியற்கையுஞ் சிலமும்போற்றிலை-எ-து.

உன்னுடையமூதாதைமார்கள் தர்மராசாக்களைப்போற் சற்குண மூந் தயவுந்தாட்சண்ணியமும் சாஸ்திரவிதியும் க்ஷத்திரியமுறையுங் கைக்கொண்டு நடக்கவில்லையோ வாராய்ராமா அதுவுமல்லாமல் உன் னுடையகுலத்தில் அங்கராசன் ராச்சியபாரஞ்செய்கிறபோது வேன னென்ற ஒருபுத்திரன் பிறந்து சன்மார்க்கமில்லாமல் துன்மார்க்கஞ் செய்து அக்ஷரக்கியானமில்லாமல் கல்விக்கியானமில்லாமல் விவேகமி ல்லாமல் மகாகோபியாகிச் சிறுபோதிலே மெத்தவும் துராசாரங்கள் செய்து பாபிஷ்டனாகிய அனாசாரனாகி ராச்சியபாரஞ்செய்து பலவித த்திலும் பிரஜைகளை உபத்திரவஞ்செய்தபடியினாலே பிதாவான தங் க ராஜன்புத்திரனான வேனன்செய்கிற கொடுமை பொறாமல் ராச்சிய த்தைவிட்டுத் தபசுக்குப்போய்விட்டார் அந்தகாலத்தில் இந்தராஜன் செய்கிற உபாதியினாலே மகாரிஷிகள் சபித்து வேனனென்பவனைப் பிராணவதை செய்தார்கள் அப்போது அங்கராசனுடைய பத்தினி யானவள்வந்து சுவாமி இனிமேல் ராசதர்மஞ்செய்கிறதற்குப் புத்திர ர்களில்லையே யவனிறந்ததினாலே எனக்கு வியாகூலமில்லை ஆனால் ராச்சியபரிபாலனஞ்செய்து பிரசைகளை இரட்சிக்க வேணடும் அதற் கென்ன செய்யலாமென்று ரிஷிகளை கேட்டாள்.

அவர்கள் கருணைகொண்டு அம்மா இந்தவேளை இவனுடைய பி ரேதத்தை தகனஞ்செய்யவேண்டாம் இதைத் தயிலத் தொணியிலே போட்டுவையுங்கள் அப்படிச்செய்தால் கொஞ்சநாள் கழித்து இவ னுடைய தேசாமிகுத்திலிருந்து ஒருகுழந்தை யுற்பவிக்கத்தக்கதாக அநுக்கிரகஞ்செய்யலாமென்று சொல்லிப்போனார்கள் அப்பா லந்தப் பிரகாரமே சிறிதுநாள்கழிந்து முனீஸ்வரர்கள்வந்துஇவனுடையபிரே

தத்தையெடுத்து இரண்டுகையையுங்கடைந்தபோது சோதிமகாராசன்பிறந்தார் அவர் பிதுர்சக்கிரவர்த்தியென்று பேர்பெற்று ஒருவருக்கும் மனஸ்த பம்வராமல் மநுநீதியாக ராச்சியபாரஞ்செய்து சகலபேர்களையுமிரட்சித்துவந்தாராம் அப்படிவருகிறபோது அந்த ராச்சியத்திலே சிறிதுநாள் மழையில்லாமல் பயிர்பச்சை யில்லாமல் புல்லுபூண்டு செடிகொடிகள் தானியங்கள் யாவற்றும் சரிந்துபோய்விட்டது அதுகண்டு ராசாவானவர் களஞ்சியத்தைத்திறந்து திரவியங்களை எடுத்து கொடுத்தனுப்பித் தீவாந்திரங்களிலே யிருந்து தானியந்தருவித்துக் குடிகளுக்குக்கொடுத்து இரட்சித்தர் அதுவுமன்றி சற்கருமங்களான யாகம் எக்கியம் பிராமணபோசனம் ஆலயங்களிலே அர்ச்சனைகள் ஆராதனைகள் மாதானங்கள் முதலானவைகளைச் செய்து மழைமாரியில்லாதபடியினாலே புரோகிதரையும் சாஸ்திரிமார்களையு மழைப்பித்து ஓய்சுவாமிகளே நான் தர்மநீதத்துடனும் ஆசாரவிதியுடனும் ராச்சியபாரஞ்செய்து இவ்வளவு தர்மதானங்களை நடப்பித்தும் என்னுடையராச்சியத்தில் மழைமாரி மறுத்ததென்னவென்று கேட்டார்.

அப்போது அவர்கள் ராசாவைப்பார்த்து பூர்வீகங்களை விசாரித்துள்ள சோதிமகாராசனே உம்முடைய பாட்டனார் அங்கராசன் செய்த தர்மத்தினாலே மழைமாரி பொழிந்து ராச்சியம் சுபேட்சமாயிருந்தது 'உன் தந்தையான வேனன்செய்த பாவத்தினாலே இந்தச் சங்கடம் வந்திருக்கிறது நீர்செய்யப்பட்ட புண்ணியத்தினாலே இனி கொஞ்சம் நாள்கழித்தால் மழைபொழியும் சகலகாரியமுங் குறைவில்லாமல் நடக்குமென்று யோசித்து பிரசைகள் சங்கடப்படுகிறதைக்கண்ணாற்பார்க்க மனஞ்சகிக்காமல் ஒருயோசனைசெய்து ஆகாயத்திலிருந்தும் மழைபொழியாமற்போனால் பாதாளகங்கையைப் பிரவேசிக்கும்படிசெய்தாள் அப்பால் தானியங்களுடைய விரைகளில்லாதபடியினால் பின்னும் பூமியின்மேல் அஸ்திரப் பிரயோகஞ்செய்தார் அப்போது பூமாதேவியும் காராம் பசுவானது அக்காட்டிலே கறந்து சகலத்தானியத்தினுடைய வாதையுங் கொடுத்தாள் அந்த வாதையினாலே பயிர்பச்சை செய்வித்து பிரசைகளைக்காத்து இரட்சித்தருளினார் வாராய் ராமா அப்படி தயவோடு கூடியிருக்கின்ற குலத்திலேபிறந்து அவர்களுடைய மார்க்கமும் அவர்களுடைய தருமசிந்தனையும் எவ்வளவும் உனக்கு இல்லாமற்போய்விட்டதே வாராய்ராமா.

வாலியைத்தடுத்தாயடல்மன்னர்நம்-எ-து.

உன்மனதிலே வாலியை நிக்ரகஞ்செய்வேன் எனக்குவேண்டிய காரியம் சாதித்தேனென்றல்லவோ சந்தோஷ மடைந்திருக்கிறாய் இதனாலுனக்குவந்து பலித்திருக்கிறது என்ன

வேலியைப்பற்றித் தாய்விரல்வீரனே-எ-து.

ராஜதர்மமானது ஒருவரிடத்திலும் பாரபட்சமில்லாமல் அன்பு ஆசாரமும் பிரஜைகள்பேரிலே பட்சமும் பிராமணவிசுவாசமும் குடிகள்பேரிலேபட்சமும் ஆறுபோகத்தி லொருபோகமும் திரைகொண்டு தானதருமங்கள் செய்து யாகாதி யெக்கியங்கள் செய்து பாபபுண்ணியங்களையறிந்து அசத்தியமில்லாமல் அதர்மமில்லாமலும் ராச்சிய பரிபாலனஞ்செய்வது அதுவே தாரபாக்கியத்திற்கு ஒருவேலியாகும் நீயொருவன் தசரதனுக்குப் புத்திரனாகப்பிறந்து என்பேரிலே கூர்மை பொருந்திய அஸ்திரத்தைத்தொடுத்து அடாதகாரியஞ்செய்ததால் அந்ததர்மவேலியையழித்து மகாபாவமும் அபகீர்த்தியுமல்லவோ சம்பாதித்துக்கொண்டாய் ராமா நீநல்லபுத்திசாலி நல்லசாமர்த்தியவான் உனக்குச்சற்றாகிலும் மனக்கிலேசமில்லையோ வாராய் ராமா.

கவி.

தாரமற்றொருவன்கொளவுன்கையில்
பாரவெஞ்சிலை யேந்தற்பழுதன்றோ
நேருமென்று மறைந்துநின்புதன்
மார்கனெய்ததோர் வில்லியர்வல்லமை.

இதன்பொருள்.

தாரமற்றொருவன்கொளவுன்கையில்-எ-து.

வாராய்ராமா நீ அக்கினிசாட்சியாகவும் வேதப்பிராமணாள் சாட்சியாகவும் ஆக பூமியறிய வலதுகைதொட்டுப் பாணிக்கிரகணம் செய்யப்பட்ட தர்மதாரமான உன்தேவியை ராவணனானவன் திருடிக்கொண்டுபோய்ச் சிறையிலேவைத்திருக்க.

பாரவெஞ்சிலை யேந்தற்பழுதன்றோ நேருமன்றி-எ-து.

நீயும் மானத புருஷனைப்போலே யானொரு ராசாவாகும் சாமார்த்தியவானாகும் விலாசதுரியத்தில் வல்லவனாகுமென்று பாரகோதண்டமாகிய வில்லையுந்தாங்கி நடக்கிறது பழுதல்லவோ இதனால் அவமானமும் குற்றமும் உண்டோயில்லையோ வாராய் ராமா அதுவுமல்லாமல்.

மறைத்து நிராயுதன் மார்பிலெய்வதோ வில்லியர் வல்லமை-எ-து.

என்னுடைய நெற்றியுங்கண்ணும் நேர்படநின்று போர்செய்யாமல்மறைந்துநின்று பாணந்தொடுத்தாய் அல்லாமலும் நிராயுதனை ஓர் ஆயுதமில்லாதவன்பேரிலே ஆயுதமெடுத்துப் போர்செய்யலாமோ வாராய் ராமா முன்னாளிலே உன்னுடையமூதாதையான அரிச்சந்திரன்விசுவாமித்திரனுடனே நாம்ஒருவார்த்தை அசத்தியஞ் சொல்லக்கூடாது சொன்னால் நமக்கு அரிஷ்டங்கள்வந்து நேரிடுமல்லாமல் ஈஸ்வரசகாயமில்லாமலும் இலட்சுமி கடாட்சமில்லாமலும் பாவம்வந்து சம்பவித்து அநேகந் துயரமடைவது மல்லாமல் இது நமதுஜன்மத்துக்கு தொடருமென்று கருதி ஒரு பொய்சொல்லாமல் நாடு நகரமுதலிய சகல சம்பத்தையுமிழந்து தன்னுடைய பெண்சாதியையும் பிள்ளையையும் பிராமணனுக் கடிமைபாகி விற்றுத்தானும் பறையனுக் கடிமைபட்டு மயானத்திலே காவலிருந்து பிரதேவர்த்தனையைவாங்கிக் காலட்சேபஞ்செய்து தன்னுடையமகனாகிய லோகிதாசனை அரவந்தீண்டியிறக்கவும் தன் தேவியானவளைக் கொலைசெய்தவளென்று காசிதேசத்தரசன் தூதுவர்கள் பின்கட்டாக இவர்கையிற்கொடுத்துவெட்டிவிடச்சொல்ல அப்போது மகனிறந்து பிரேதமாகக் கிடப்பதையும் பாராமல் தன்கையினாலே தன்பத்தினியை வெட்டத்துணிந்தார் இவ்வளவு பரமசங்கடம் நேரிட்டும் அசத்தியற்குப்பாத்தியப்படாமல் சத்தியவானாக விருந்ததினால் தான் தெய்வச்சபையிலே சனகமாகியிருந்த அரிகாப்பிரமாதிகள் தேவர்கள் திக்குப்பாலகர் பிர்மரிஷிகளி முதலிய சகலரும் வந்துவரங்கொடுத்தருளினார் அதனால்கீர்த்தியுடனே அரசாட்சி செய்து சத்தியத்திற்கும் அரிச்சந்திரனென்று நிலைபெற்றுக்கொண்டார் வாராய் ராமா நீ அப்படிப்பட்ட அரிச்சந்திரனுடைய பவுத்திர கோத்திரத்திலே உற்பவித்தும் அசத்தியகர்மஞ்செய்ய அஞ்சாமல் என்னை வதைசெய்தாயே வாராய் ராமா நிராயுதன்பேரிலே சவுரியவான்கள் ஆயுதமெடுத்துப் போர்செய்வார்களோ நீ சொல்லுவாய் ராமா.

கவி. காரிஎன்ற நலங்கிநிறுத்திநேய்
ஊரியன்ற மதிக்குளதாமென
சூரியன்மா புக்கொறுதொன்மறு
ஆரியன்பிந் தாக்கினையாமரோ.

இதன்பொருள்.

காரியென்ற கலங்கிநிறுத்திநேய்-எ-து.

வாராய் ராமபத்திரா கரனென்னும் கருமேகம்போல நீலமேகவண்ணனான ஓய் ராகவா.

ஊரியன்ற மதிக்குள தாமென்க-எ-து.

ஊந்து ஆகாயமார்க்கத்திலே பிரகாசித்துச் சோட சகலேயோடும் விடமானு-ரூடனுகச் சீதகிரணம் பொழியப்பட்ட பூரணசந்திரனுக்கு முயர்கரையென்ற ஓர் மறுவுண்டு ஆகையினல் சந்திரகுலத்துராஜாக்களுக்கு மறுவென்றும் குற்றமுண்டென்றும் சொல்லலாம் வாராய் ராமா.

சூரியன் மரபுக்கொருதொன்மறு-எ-து.

சூரியபகவானுக்கு ஒரு மருவுமில்லை ஆகையினலே சூரியகுலத்து ராஜாக்களுக்கு கொஞ்சமானுலும் ஒரு குற்றமில்லையே வாராய் ராமா.

ஆரியன்பிறந் தாக்கினையாமரோ-எ-து.

அப்படி மருவில்லாத குலத்திலே நீ யொருவன் தசரதனுக்குப் புத்திரனுகப்பிறந்து ஒருவிரட்சத்தில் மறைந்து என்பேரிலே ஒளித்து பாணந்தொடுத்து அபகீர்த்தி சம்பாதித்தாய் இதனுலே சூரியகுலத்துக்கு ஒரு குற்றமல்லவோ உண்டுசெய்தாய் வாராய் ராமா உன்னுடைய மூதாதைமாரிலே வாகுராசன் குமாரனுன சகராசனென்பவருக்குப் பானுமதியென்னும் பிரபையென்றும் இரண்டு பாரியாளுண்டு அவர்களில் மாயையானவளுக்கு அறுபதினுயிரம்பேர் சகராள் பிறந்தார்கள் பானுமதிவயற்றில் சமஞ்சலனென்ருெருவன் பிறந்தான் இப்படி அறுபதினுயிரத்தொரு புத்திரர்களோடுங்கூடி சகரராசன் ராச்சியபரிபாலனஞ்செய்ய பூலோக ராசாக்களைச்செயித்து திரவியங்கொண்டு மகாவீரவர்மனுகித தொண்ணூற்ருென்பது அஸ்வமேதயாகஞ் செய்து முடித்து அதற்குமேல் தேவேந்திரபட்டத்தை யபேட்சித்து நூராம்யாகஞ்செய்தார் அந்த யாகமுகத்திலிருந்து வரப்பட்ட குதிரையானது ஐம்பத்தாறுதேசமுஞ் சுற்றிவரும்போது தேவேந்திரன் இந்தச் சகராசனுக்கு நூராம்யாக முடிந்தயேனுல் நம்முடையதெய்வபட்டத்துக்கு வருவானென்று பயந்து இந்த யாகத்தை அழித்துவிடுவதே நலமென்று கருதி சகராசனுடைய அஸ்வத்தைப் பிடித்துக் கொண்டுபோய் பாதாளலோகத்தில் கபிலருடைய ஆசிரமத்தின் பின்னுல் கட்டிவைத்தான்.

அப்போது சகருள் அறுபதினுயிரம்பேரும் அந்தக் குதிரையைத்தேடிப் பூலோகமெங்குங்காணுமல் பாதாள லோகத்தில் சென்று பார்க்கவேணுமென்று நினைத்துப்பஞ்சா சதகோடியோசனை விஸ்தாரம்பொருந்திய பூமண்டலத்தைப் பிளவாகத்தோண்டிப் பாதாளலோகத்திற்சென்று அந்த அறுபதினுயிரம்பேர் சகராளும் கபிலமகாரிஷியின்மேல் கோபித்து வில்வளைத் தெதிர்த்தார்கள் அதைக்கண்ட அந்த அறுபதினுயிரம்பேரையும் எரித்துச்சாம்பலாக்கிவிட்டார் வாராய் ராகவா பிற்பாடுசிறிதுநாள் கழித்துச் சகரராசன் பரமபத

மடைந்தான் அப்பால் சகரராசன் குமாரனாகிய மஞ்சதமென்பவன்
இராச்சியபரிபாலனஞ்செய்து அசமஞ்சனைப்பெற்றான் அசமஞ்சன்
திலீபராகனைப்பெற்றான் திலீபராசன் பாகீரதனைப் பெற்றான் இப்படி
நாலாந்தலை முறையிலே பிறந்த பாகீரதன் பூர்வீகசங்கதிகளை விசாரித்
துச் சகராளுக்கு அந்த அநிஷ்டை நீக்கி நற்கதி யடைவிக்கவேண்டு
மென்று ஆகாயகங்கையைத் தருவிக்கவேண்டிப் பிரம்மதேவரையும்
பரமேஸ்வரனையும் கங்காதேவியையும் கண்ணுவமகாரிஷியையுங் கு
றித்து முப்பத்தாராயிரம் வருஷம் தபசுசெய்து பிரமகங்கையை பூமி
யிலே கொணர்ந்து பூமாதேவியம்மனுடைய பிரசாதம்பெற்று பாதாள
லோகத்திலே கங்கையைக்கொண்டுபோய்ச் சகராளுக்கு பிதிர் தர்மஞ்
செய்து கதியேற்றி அந்தக் கங்காபரமேஸ்வரியைச்சகராள்தோண்டி
உண்டுசெய்யப்பட்ட ஏழுசக்கரத்திலேயும் நிறைத்தான் வாராய் ரா
மா ஆகையினாலே சமுத்திரத்தை யுண்டுசெய்தது சகராளாகும் அதி
ல் தண்ணீர் நிறைத்தது பாகீரதராசனாகும் இப்படிலோக உபகாரமா
கவும் லோகப்பிரத்தியட்சமாகவும் உன்னுடைய முன்னோர்கள் கீர்த்
திசம்பாதித்துக்கொண்டார்கள் நீ ஒருவன்பிறந்து அடாதகாரியமாகம
றைந்து நின்று என்னை வதைசெய்தபடியினாலே நீயும் அபகீர்த்தியல்
லவோ சம்பாதித்தாய் சற்றாகிலும் யோசனையில்லாமற் போச்சுதே
வாராய் ராமா அதுவுமல்லாமல் இன்னும் ஒரு காரணஞ்சொல்லுகி
றேன்கேள்-எ-து.

கவி. நிறைந்துமுன்னொருவர்முன்னாள் நீர்முகந்துற்றபோது
மறைந்துநின்றெய்ததுண்டோ மன்னநின்றுகைதானும்
நிறைந்திடுங்கானந்தன்னி னீயுமத்தகமைசெய்தாய்
மறைந்துநின்றெய்வதுங்கள் வருவழிமுறைமைதானே.

நிறைந்துமுன்னொருவர்முன்னாள் நீர்முகந்துற்றபோது-எ-து.

நிறைந்து தண்ணீர்ததும்பி இருக்கப்பட்ட பஞ்சமடுவின்கரையி
லே என் தாதையானவர் தொளாயிரத்தொண்ணூற்றொன்பது யானை
யையுங்கொன்று இன்னம்ஒருயானையைக் கொல்லவேணுமென்று ஒளி
த்து நிற்கிறபோது ஒருகுரு புத்திரரானவர் தன்னுடைய மாதாபிதா
க்கள் விருத்தாப்பியமாதலால் அவர்களிரண்டுபேரையும் காவடிகட்டி
தோளிலே சுமந்துகொண்டு தீர்த்தயாத்திரையாகவந்தார் அப்போது
அவர்களுக்குத் தண்ணீர்தாகத்தினால் காவடியானதை ஒருமரச்சார்பி
ல் வைத்து ஜலபாத்திரை எடுத்து பஞ்சமடுவிலே யிரங்கிக் கமண்ட
லத்திலே தண்ணீர்முகந்து யெடுக்கையில் குடுகுடென்றசத்தங்கேட்
டது அந்த சத்தத்தை யானையானது தண்ணீர்குடிக்கிறதென்று நினை
த்து உன் தாதையான தசரதனானவன் சற்பனையினாலே மறைந்து நி
ன்றெய்ததுண்டோ மன்னநின்றாதைதானும்-எ-து.

குருபுத்திரனென் றறியாமல் யானையானது தண்ணீர் குடிக்கிற தென்று அஸ்திர மேவினர் அது குருபுத்திரன்பேரில்பட்டு இறந்து போனான் அந்த யேதுவாக உன்பிதவானவனுக்கு ஒருசாபம் வந்தது வாராய் ராகவா.

நிறைந்திருங்கானந்தன்னி னீயுமத்தகமைசெய்தாய்-எ-து.

விருட்சங்கள் நிறைந்திருக்கிற வனாந்தரத்தில் பிதுர்வாக்கிய பரிபாலனஞ்செய்ய வந்தவனாகிய நீயும் அநீதமாக ஒரு மறைவிலே ஒளித்துநின்று என்பேரிலே அஸ்திரந்தொடுத்துச் சதிமோசஞ் செய்தாய் ஓய் ராமா.

மறைந்துநின்ற றெய்வதுங்கள் வழிவழிமுகமைதானே-எ-து.

மரத்தில் மறைந்துநின்று சொல்லுகிறது குலாசாரமாக உங்களுக்கு வழிவழிமுறைமையாகும் உன்பிதாவான தசரதரானவர் ஆள்பேதந் தெரியாமல் வகைமோசமபோனார் நீயறிந்து என்னைக் கெடுக்கவேணுமென்று அவமோசஞ்செய்தார் வாராய்ராமா யானென்ன குற்றஞ்செய்தேன் என்னகாரணததினாலே என்பேரில் அஸ்திரந்தொடுத்தாய் வாராய் ராமா-எ-து.

கவி. மாபாவி யுயிர்மாளப் பிலத்துணிபோய்
வருமளவுங்காவென்ன தாவாறே
போயாவியுண்டுநீ வந்தபோது
புகுந்துனரசுனக்கென்று புலொவாறே
சாயாதபதிதனையன் றனையமோட்டித்
தாரமெனுமுனிமைய வடனையும்வல்லி
ஓயாதசினமுயல விவன்செய்குற்றம்
உனக்கென்னபோர்வாலி நரைத்திடாயே.

இதன்பொருள்.

மாபாவியுயிர்மாளப் பிலத்துணியேபோய்வரு
மளவுங்காவென்னக் காவறே-எ-து.

வாராய் வாலிநீ இன்னேறவரைக்கும் சொல்லப்பட்ட கதையுங் காரணங்களையுங் காரியபேதங்களையும் நான்கேட்டேன் நீயும் அறிவுள்ளவந்தான் சந்தேகமில்லை உன்னிடத்தில் ஒருவசனங் கேட்கிறேன் அது யெப்படி யென்றால் மாயாவியென்கிற அவுணனும் நீயுமாகப் போர்செய்து உங்கள் இரண்டுபேருக்கும் வெற்றிதோர்ப்பு யில்லாமல் போனதால் பாதாள லோகத்திலே சென்று போர்செய்ய வேண்டுமென்று சுக்ரீபனை யழைத்து நீராச்சியபாரஞ்செய்திரு நான் போய் மாயாவியைச் செயித்து வருகிறேனென்று சுக்ரீபனோடே சொல்ல அவன் அந்தவகை செய்யாததினாலேயோ வாராய் வாலி அதுவுமல்லாமல்.

போயாவியுண்டட நீவந்தபோது
புகுந்துனரசுனக்கொன்று புகலாவாரோ-எ-து.

நீயும் பிலத்துவாரவழியிலேசென்று பாதாளலோகத்திலேபுகுந்து பதினாலுவருஷம்போர்செய்து மாயாவியைச்செயித்து நீயுங்கிட்கிந்தாபுரிக்குவந்தபோது சுக்கிரீபன் உன்பாதத்திலேவணங்கி நீராச்சியபாரஞ்செய்யவேணும்அடியேன் பணிவிடைசெய்கிறேனென்றுசொல்லாமையினாலோ எதினாலிவன்மேல் உனக்கு விரோதமுண்டானது அவனுக்கொரு விரோதமுஞ்செய்யவில்லையே வாராய்வாலி.

சாயாதபதிதனையின் றனையமோட்டித்
தாரமெனுமுரிமையவ டனையும்வல்லி

இதுவரையிலும் அவன் ஒருகுற்றஞ் செய்யாமலிருக்கச் சாயாதேவிக்குபத்தாவான சூரியபுத்திரனாகியசுக்ரீபனை அடித்துத்துரத்தி அவனுடைய ராச்சியபத்தையும் அவன்தாரமென்னும் பெண்சாதியையும் அபகரித்துக்கொண்டு சுக்ரீபனை எங்கெங்கும் காணாமல் பிராணவதை செய்யவேணுமென்று அடங்காதகோபங்கொண்டு.

ஓயாதசினமுயல விவன்செய்குற்றம்
உனக்கென்னபேராவலி யுரைத்திடாயே-எ-து.

உன்தம்பியான சுக்ரீபனை இவ்வளவுவுபத்திரவஞ் செய்யத்தக்கதாக உனக்கென்னகுற்றஞ்செய்தான் சொல்லாய்வாலி.

கவி. ஆதலாலு மவனெனக்காருயிர்
காதலாலலி னாலிக்கடமையால்
ஏதிலாரு மெளியரென்றுலவர்
தீதுதீர்ப்பதென் சிந்தைக்கருத்தவரே.

இதன்பொருள்.

ஆதலாலுமவனெனக்காருயிர்-எ-து.

இப்படிச் சிறிதுகுற்றங்களுஞ் செய்யாத சுக்ரீபனைத் துரத்திமுடுக்கினபடியினாலே அந்தசுக்ரீபன் என்னைவந்தடுத்து சுவாமிவாலியானவன் என்னைவதைசெய்யவேணுமென்று துரத்தியடித்து என்ராச்சியத்தையும் அபகரித்து என்னுடைய ஸ்திரீயையும் அடக்கிக்கொண்டான் அடியேனை நீர் அபயங்காக்கவேணுமென்று அடைக்கலம்புகுந்திருக்கிறான் ஆகையால்.

காதலாதலினாலிக்கடமைபால்-எ-து.

காதலென்னும் அன்பும் ஆசாரமும் பக்திவிசுவாசமும் சத்தியமிருந்தபடியினால் அவனுக்கு அபயஸ்தக்கொடுத்தேன் வாராய்வாலி.

ஏதிலாரு மெளியரென்றுயுவர்-எ-து.

ஒருவருஞ்சகாயமில்லாமல் பந்துகளில்லாமல் அசேஷரான சாதுக்களாயிருப்பார்களாகில் இந்தலோகத்திலே யாதாமொருத்தர் அப்

படிப்பட்ட சாதுக்களை உபத்திரவஞ்செய்தார்களானாலும் யாதாமெ துராசாரம் செய்தார்களானாலும்.

சீதுதிர்ப்பதேன் சிந்தைக்கருத்தரோ-எ-து.

கொலைகளவு வஞ்சனை பாதகம் துரோகம் அசத்தியம்அதர்மம் ஆகிய இப்படிக்கொத்த துர்மார்க்கஞ் செய்யப்பட்ட துஷ்டரைக்கொன்று சிஷ்டரைப் பரிபாலனஞ்செய்கிறது எனக்கு க்ஷத்திரியதர்மமாகும் தர்மத்தை இரட்சித்து அதர்மத்தைச் சயம்பண்ணவேணுமென்பதைக்குறித்தே இந்தவனதீட்சை பெற்றுவந்தேன் நீயோவென்றால் சுக்ரீபனுக்கு அதிக்துரோகஞ் செய்தபடியினாலே பாணந்தொடுத்தேன் வாராய்வாலி-எ-து.

அவதாரிகை என்றிப்படி ஸ்ரீராமர்சொல்லக்கேட்டு வாலியானவன் மறுமொழிசொல்லுகிறான்.

கவி. மணமுமில்லை மனுநெறிவந்தகற்
குணமுமில்லை குலமுதற்கொற்றவுன்
உணர்வுசென்றுழி சொல்லுமொழுக்கலாம்
திணமுநெப்பு நெருங்கியநேமியாய்.

இதன்பொருள் மணமுமில்லை-எ-து.

வாராய்ராமா சுக்கிரீபனை ராச்சியம்விட்டு துரத்தி அவனுடைய உரிமையாகியஸ்திரீயை அபகரித்தபடியினால் உன்பேரிலே பாணந்தொடுத்தேன் என்றல்லவோசொன்னாய் வாராய்ராமா அதுகாரியமெப்படி நாங்களோவென்றால் மிருககலமாகிய வானரங்களுக்கும் வாராய் ராமா எங்களுக்கென்றால் மணமென்றகலியாணஞ்செய்து ஒருஸ்திரீயைக்கைதீண்டவேணுமென்றும்சொல்லுகிற முறைமைப்பாடில்லைவாராய்ராமா உங்களுக்கோவென்றால் மணமென்னுஞ் சோபனத்தையுடைய ஒருஸ்திரீயானவள் என்பாரியாகுமென்று கைதீண்டத்தொடவேணுமென்பதாம் கோத்திரசூத்திரம்விசாரித்து பொருத்தமிதித்தம்பார்த்து முகூர்த்தம்நேமித்து பந்துக்கள்யாவரையும் தருவித்துமபூப்பந்தலின்கீழ மணவரையில் அக்கினிசாட்சியாக வேதவேதப்பிராமணர்சாட்சியாக ஓமாக்கினிதேவன்முன்பாக ஆகாசபூமிபரியவலதுகைதொட்டுப் பாணிக்கிரகணஞ் செய்யவேணும் இன்னும் எட்டு விதமான கலியாணமுண்டு அந்தவிபரமெப்படியென்றால் பிரமகலியாணம் தெய்வகலியாணம் ஆரிஷம் பிரஜாபத்தியம் அசுரம் ராக்ஷசம்காந்தர்வம் பாசம்என்பதாம் அவற்றுள் பிரமகலியாணமானது மகாசாஸ்திரக்கியானனாகிய ஞானமார்க்க விர்ப்பன்னனாகயாகஞ் செய்யப்பட்ட மகாயோக்கியவானாயிருக்கின்றவனைத் தான்தானே வலியஅழைத்

து உனக்கு என்புத்திரியைத்தருகிறேனென்று இந்தப் புருஷனுக்கு வேண்டிய வஸ்திரஆபரணங்களும் அலங்காரங்களும் அணிவித்து சகலவஸ்துவுந் தானேசெலவுசெய்து புருஷனுடையபொருளில் திரணமும்செலவுசெய்யாமல் அவர்கள் இரண்டுபேருக்கும் போஜனார்த்தத்திற்குவேண்டிய விளைபூமியுங்கொடுத்து விவாகஞ்செய்து கொடுப்பது அப்படிகொடுப்பது பிர்மாவுக்குபிரீதியாய் அதன்பலன் அந்தஸ்திரியின்வயிற்றிலே பிறக்கப்பட்ட குழந்தைகளசெய்கிற புண்ணியத்தாலே அந்தகன்னிகாதானங்கள் கொடுக்கப்பட்ட பிரபுவினுடைய முன்னோர்கள் இருபத்தொருதலைமுறைக்கும் மோட்சம்வருமென்று சொல்லுவார்கள்.

தெய்வகலியாணமானது சாஸ்திரவிசுவாசமும் பத்திவிசுவாசமும் எதார்த்தமானதும் நித்தியசாமயோக்கியமுமுள்ளவனாக ஒருவன்வந்து தன்மகளைக்கேட்டால் அவனுக்குகொடுக்கசம்மதித்து அவ்விருவருக்கும் அலங்காரவஸ்திர ஆபரணங்களையும்பூட்டித் திரவியமுங்கொடுத்து அதன்பலனாவது அதன்வயிற்றிலேபிறக்கப்பட்ட புத்திரர்கள் செய்கிற புண்ணியத்தினாலே அந்தக்கலியாணஞ்செய்வித்தபிரபுவினுடையபிதுர்க்கள் பதினாலுசென்மமு மோட்சமடைவார்கள்.

ஆரிஷகலியாண மெப்படியென்றால் ஒருவன்வந்து தன்மகளைக்கேட்டால் அவன்சகலகாரியத்துக்கும் யோக்கியவானென்றறிந்து அவர்களுக்கு வஸ்திரஆபரணங்களுமணிவித்து சகலமுந்தானேசெலவுசெய்து அலங்காரகன்னிகாதானமாகக் கலியாணஞ்செய்துகொடுப்பது அந்தஸ்திரீயினுடைய புத்திரர்கள்செய்கிற புண்ணியத்தினாலே கொடுக்கப்பட்டவனுடைய ஏழுதலைமுறைக்கும் மோட்சம்வரும்.

இனி பிரஜாப்த்தியகலியாண மெப்படியென்றால் ஒருவன்வந்து தன்மகளைக்கேட்பானேயானால் தீரவிசாரித்து ஆலோசனைசெய்து அவன் யோக்கியவானென்றறிந்து தன்மகளுக்குவேண்டிய ஆபரணஅலங்காரஞ்செய்து அதற்குவேண்டிய சிலவுசெய்து கலியாணஞ்செய்துகொடுப்பது அவள்வயிற்றிலேயிந்த குழந்தைகளினுடைய புண்ணியத்தினாலே கொடுக்கப்பட்டவனுடைய மூன்று சென்மத்திற்கு மோட்சமவரும் இந்நாலுகலியாணமும் பிராமணகர்மம்மற்று முண்டானவர்களும்பண்ணலாம் வாராய்ராமா பிரஜாபத்தியம நிற்க அசுரகலியாணம் எப்படியென்றால் தன்மகளைவந்து ஒருவன்வந்துகேட்டால் இவ்வளவுதிரவியந் தரவேணுமென்று நிர்ணயஞ் செய்துக்கொண்டபிற்பாடு தன்மகளைக்கொடுத்து தன்னுடைய செலவுசெய்து உப

போகச்சிரப்புகளை தன்மகளுக்கு நடத்துவிப்பது அதற்கு அவனுடையகுழந்தையினாலேவரப்பட்ட புண்ணியமில்லை இனிமேல் ராட்சதகலியாணம் எப்படியென்றால் தன்மகளைகேட்கவந்தவன் மூடனானாலுங்குறைமனிதனானாலும் விருத்தனானாலும் வியாதிபஸ்தனானாலும் அஃதொன்றையும்யோசியாமல் அதிகதிரவியம்வாங்கி இரண்டுசிலவுகளையும் புருஷனேசிலவுசெய்வதாம் அப்படி விவாகஞ்செய்துகொடுத்தால்புண்ணியமில்லை புருஷனுடைய கேந்திரதர்மம் உத்தாரணம் அந்தக்குழந்தைகளினால்வரும் இனிதாக தர்மகலியாண மெப்படியென்றால் ஒருஸ்திரீயும்புருஷனும் தாங்களே மனமொத்துக்கூடுவது அதனால்அவர்களிரண்டுபேருக்கும புண்ணியபாவம் மிச்சமாகும்இனிபைசாசகலியாணம் எப்படியென்றால் ஒருஸ்திரீயை ஒருவன்தனக்கு வசமாகாமற்போனால் அவமோசமான விடங்களிலேயும் நித்திரைவேளையிலும் ஸ்திரியானவள் மனமில்லாமலிருக்கிறவேளையில் கண்டித்ததினாலும் பெலத்தினாலும் துர்மார்க்கத்தினாலும் வசப்படுத்திச்சேர்ந்தால் அதனால் மகாநரகத்தை யனுபவிப்பதல்லாமல் முடிவில்பைசாஜென்மம்பலிக்கும் இப்படி கலியாணஞ்செய்து ஒருஸ்திரீயை சேரவேணுமென்பது எங்களுக்கில்லை வாராய்ராமா மநுவிக்கியானதர்மந்தவறாமல் அவருடைய குலாசாரந்தவறாமலுஞ் சுத்திசுசிகரம் சுதானதர்மம் அனுஷ்டானதர்மம் தேவபூசை குருபக்தி வாச்சிம் சற்சனசாவகாசம் ஆசார்யம் பெரியோரிணக்கம் பிராமணவிசுவாசம் நோன்பு விரதம் கதிகாமம் விருந்துண்டல் மாதாபிதா தமயன் மாமன் பந்துவர்க்கம் அன்பு நம்பிக்கை தெய்வதரிசனம் சுமங்கலசுபயோகம் வஸ்திராபரணஅலங்காரம் வளர்செல்வம் சுபவசனம் நிலைகுலையாப்பின்பு சத்தியம சாமம் ஆகிய இப்படிப்பட்ட நீதத்தோடோ நீங்களல்லவாநடக்கவேணும் எங்களுக்கு அந்தமுறையுமில்லை வாராய்ராமா.

மனுநெறிவந்தனர்குணமில்லைகுணமதற்கொற்றவ-எ-து.

சற்குணத்தோடே விவாகம பொருமை தயவுநிறை அறிவுஒப்புகடைப்பிடி தவம்தானம் கல்வி ஒழுக்கம் இப்படிக் குணகுணமுமில்லையே வாராய்ராமா நீயோவென்றால் பிராமணக்ஷத்திரியன் வைசியன் சூத்திரனென்றும் நான்குகுலத்திலே பதினெண்பிரிவான எழுபத்திரண்டுவம்மிசமாகிய சக்கிலிஜாதிகளில் அவரவருடைய குலாச்சாரம்போல் நிலைநிறுத்தி வரன்முறையாக நடத்துவிக்கப் பட்டவனாகும் வாராய்ராமா.

உணர்வுசென்றழிசொல்லு மொளுக்கலால்-எ-து.

எங்களுடைய குலசாரமெப்படியென்றால் வானரங்களாகிய எங்களுடையமனதிலே தோன்றினபடி நடக்கிறது நாங்கள்குரங்குசாதிகளல்லவோ-வாராய்ராமா இன்னகாரியம் செய்யலாகாது நன்மையின்னது பாவமின்னது புண்ணியமின்னது கீர்த்தியின்னதுமானமின்னது அவமானமின்னதுயென்ற வர்ச்சியாவர்ச்சியமும் பகுத்தரிகிறவேதமுமில்லாமல் கடன் காரன்யங்கன் மனதிலேநினைத்தபடி நடக்கிற மிருகங்களாகும் வாராய்ராமா.

திணமுநெய்யுநெருங்கியநேமியாய்-எ-து.

சத்திராதிகளுடைய வமிசத்தையும் உதிரத்தையும் குடித்திருக்கிற ஆக்கிஞா சக்கிரத்தைத் தரிக்கும்ராகவா-எ-து.

கவி.

பிறையுண்ட நுதலுங்கள்பெண்களைப்போ லெங்கள்குலப்பேதைமார்க்கு, நிறையுண்டோகற்பழியாவகைக்காக்கநீதியுண்டோ கறையுண்டுநெடுங்கானிற் கனியருந்தித்திரிவார்க்குக்காதலானால், முறையுண்டோமுறைதிறம்பாதறங்காத்த முதல்வனேமொழிந்திடாயே.

இதன்பொருள்.

பிறையுண்ட நுதலுங்கள் பெண்ணைப்போ
லெங்கள்குல பேதைமார்க்கு

பிறையென்றுசொல்லப்பட்ட பஞ்சமிந்திரனைப்போலே நெற்றித்தடாகமும் அழகுபொருந்திக் கார்மேகம்போல் கறுத்துநீண்டு நெருங்கின அளகபாரமுங் மகரமச்சம்போல்வாரிநீண்டு சிறுத்தபார்வையான நயனமும்வில்போல்வளைந்தபுருவமும் கறுத்தரோமரேகையுங்கண்ணாடிபோன்ற கபோலமும் பூரணசந்திரனைப்போல முகபாவனையும்வளைக்கொடிபோலேதழைத்த கன்னமும்குமிழம்பூப்போலநாசியும் பவளக்கொம்புபோல் அதரமும் ஆணிமுத்துப்போலவும் முல்லை அரும்புபோலவும் பிரகாசிக்கிற பல்வரிசையும் அன்றுபாளை கழிந்தகன்னிகமுகுபோல் கழுத்தும் பலமூங்கில்குறுத்துப்போல ஒயிலானதோளும்விஸ்தாரமாகிய ஒளிவானமார்பும்மிருதுபொருந்திய இரண்டுகால்வரிசையும் தாமரையிதழ்போலே விரல்களும்,மிருதுவாகக்குறைத்துப்பறந்தஅகங்கையும் மன்னமானரேகைகளும் சிவப்புரேகையுற்ற உதிர்களும் செவ்விளநீர்க் குறும்பைப்போலும் விருத்தமாகிய கூவிளம்பழம்போன்ற ஸ்தனபாரமும வாழைத்தண்டுபோலும் யானைத்துதிக்கைபோலும் இறுதுடையும் சிறுத்தமுழங்காலும் தாழம்பூவைப்போல மேல்பருத்தும அடிசிறுத்தும் ஒளியானகணைக்காலும்பந்துபோலதிர

ட்சியாகியகுதிக்காலும் புத்தகம்போலப்புறவடியும் பவளக்கொம்பு போலவிரல்களும் அதிலேவச்சிரப்பதித்ததுபோலநகமுஞ் செம்பஞ் சுபோல் சிவந்திருக்கிற பாதவரிசையும் வெண்மையற்ற அகங்காலும் சன்னமாகிய ரேகையும் இப்படி சாமுத்திரிகாலட்சணம்போல் முப்பு த்திரண்டுரூபம் அழகுவாய்ந்து சவுந்திரியமா யிருக்கிற உங்களுடைய ராசகன்னிகளைப்போல் எங்களுடைய வானரஸ்திரீகளுக்கு ஒன்று மில்லை.

நிறையுண்டோகரையுண்டோ கற்பழியாவகைகாக்கநீதியுண்டோ

நிரஞ்சனமான அழகும் நிரஞ்சனமான பத்தியும் ஆசாரமான வார்த்தையுமாகிய அதுவுமல்லாமல் கற்பழியாத நிலமையுடனே உங் கள் ஸ்திரீகள் வரவேணும் அதின் விபரம் எப்படியென்றால் கற்புடை யபெண்கள் தன்பத்தாவானவரை மாதாபிதாகுரு தெய்வமென்பதாகக் கருதி அவர்ஜெபதப அனுஷ்டானஞ் செய்யும்போது தேவார்ச்சனை செய்யும்போதும் புராணசாஸ்திரம் வாசிக்கிறவேளையிலும் குருவிட த்திலே சிஷன்பயபக்தியாக பணிவிடைசெய்து வருகிறதுபோல ஆசா ரவுபசாரஞ் செய்யவேணும் புருஷன் அன்னம்புசிக்கிறவேளையிலே மாதாவானவள் குழந்தைகளுடைய பசிதாகமறிந்து அன்னபானாதிக ளைக்கொடுத்து இரட்சிக்கிறதுபோல பத்தாவானவர்க்கு இஷ்டமானப தார்த்தங்களைபரிமாறிச் சமீபத்தில்நின்றுகொண்டு அவருடைய நினை வையுமேன்மையுமறிந்து பரிபாலிக்கவேணும் காரியகுணதோஷங்க ளை விசாரிக்கிறபோது ராஜாவுக்குமந்திரிபுத்திசொல்வதுபோல புருஷ னுக்குயோசனைசொல்லவேணும் சிறக்காரியம்பார்க்கும்போது வீட்டு வெள்ளாட்டியைப்போலே தேகபிரயாசைப்பட்டு பணிவிடைசெய்ய வேணும் பார்த்தவுடனே பயபக்தியாகவசனிக்கவேணும் சரிசமான மாக நில்லாமல் ஒருசார்பிலேநின்றுவார்த்தை சொல்லவேணும் கோ பமில்லாமலும் அதட்டிவார்த்தை சொல்லாமலும் அச்சம்பயம்நாணம் பயிர்ப்பென்னும்நான்குகுணத்தோடே கூடியிருந்து சார்வதாஸ்நான ம்செய்து தேகசுத்தியாக அலங்கார வஸ்திரம் அணிந்து ஆபரணம் பூண்டு புஷ்பபரிமளசுகந்தங்களை அணிந்து அரிசனவாடைவாராமல்ச ந்தோஷ பரவசமாயிருந்து விரதம் நோன்புகள்செய்து தோத்திரஞ் செய்து பக்தியுடனே பிதிர்தர்மம் தெய்வபூசை தானதர்மமுதலானவ கைகளைபிரீதியாகச்செய்து யாவரிடத்திலும் அன்போடும் ஆசாரத் தோடும் வார்த்தைசொல்லி ஆடல்பாடல் வேடிக்கை விநோதங்களில் மிகவும் பிரியமில்லாமல் அடியார்பணியாளர்பேரிலே அதிகமாகக் கோ பியாமலும் அன்னியகிரகங்களிலே அடிக்கடிபோகாமலும் பர்த்தாவி

னுடைய வசனத்திற்குத் தடுத்துச்சொன்னாலும் பத்தாவினது ஏது
வாக யாதொருவர் வந்தாலும் அவர்களுக்குத்தக்க விபரங்களை சொல்
லியனுப்பிக்கொண்டிருக்கவேணும் இராத்திரியில் அந்தப்புரத்தில் ச
ப்பிரமஞ்சத்தில் புருஷனோடு உல்லாசமாகவிருந்து வேசிகளைப்போல
பலபலலீலைகள்செய்து புருஷனுக்கு இஷ்டம்போலிருந்து புருஷன்து
யின்ற பிற்பாடு தானுந்துயின்று அருணஉதயத்திலே புருஷனுக்கு
முன்னேஎழுந்து தீபம்பார்த்துக் கிரககிர்த்தியங்கள் யாதொன்றும் வ
ழுவாமல்செய்து ஆசாரமாய் வாழவேணும் மாசத்திலே ஒருதரம்தூ
ரஸ்திரீயானால் நாலாம்நாள் கங்கையிலேமுழுகி ஆதித்தனை தெரிசனை
செய்து அன்னியபேர்களைப்பாராமல் கூந்தலை அவிழ்த்து முன்னாலே
விட்டு உலர்த்திக்கொண்டுவந்து கிரகத்திலே பத்தாவின்முகம்பார்க்க
வேணும் பத்தாவில்லாத சமயத்தில் தீபம்பார்க்கவேணும், மேலும்
பர்த்தாவானவர் கிரகத்திலேயில்லாத சமயத்திலே வஸ்திர அலங்கா
ரமும் பரிமளாதிகளுமில்லாமல் சரீரம் சற்றே மாசடைந்திருக்கவே
ணும் இன்னம்பலபல கிரிகைகளுண்டு இப்படிபதிவிர்த்தியமும் பதிவி
ரதாதர்மமும் இரட்சித்துவந்த ஸ்திரீயினுடைய முன்னோர்களாகியபி
திர்களுக்கு இருபத்தொரு தலைமுறைக்கும்மோட்சம்வரும் அவர்களு
டைய உத்தமகுணத்திலே அன்னியசுகத்தில் மனதுபோகாமலும்போ
னமனதைத் திருப்பிக்கொண்டு கற்பை நிலைநிறுத்திக்கொள்வார்கள் ஆ
னாலந்தஸ்திரீகளுக்கு அக்கினிபகவானும் ஆதிபகவானும் வாயுவரு
ணன்முதலிய் தேவாதிகளும் திரிமூர்த்திகளும் பயப்படுவார்கள் அவர்
கள் வாழப்பட்ட கிரகம் புண்ணிய ஸ்தலமாகும இப்பேர்ப்பட்ட கற்பு
நிலைமையோடேவாழுகிற முறைமையும் எங்களுக்கில்லை வாராய்ராமா
உங்களுக்கென்றால் பொற்பொரை லாவண்ணியமான அழகுடையபெ
ண்களா யிருக்கவேணும் விருத்தாப்பியமானாய் அவர்கள்பேரிலே உங்
களுக்கு இஷ்டமிராது அந்தப்பேதாபேதமும் மற்கடங்களாகிய எங்
களுக்கில்லையே வாராய்ராமா.

கறையுண்டநெடுங்கானிற் கனியருந்தித்திரிவோர்க்கு காதலானால்.

முனிசிராதிகள் வந்து யாகங்கள் எக்கியங்கள் செய்யப்பட்டயாக
ப்புகைசூழ்ந்திருக்கிற வனவாசத்தில் காயுங்கனியும் இலையுந்துளிரும்
பூவும்பிஞ்சும் அருந்தி சுனைநீர்குடித்து ஒருமரத்திலே யிருந்து ஒரும
ரத்திலே பாய்ந்துவிளையாடப்பட்ட மற்கடங்களாகிய எங்களுக்குகாத
லென்ற காமவிகாரமுண்டு வாராய்ராமபத்திரா. [யே

முறையுண்டோ முறைதிரம்ப்தரங்காத்தமுதல்வனே மொழிந்திடா

எங்களுக்கு மன்மதவிகாரம் வந்து நேர்ந்த சமயத்தில் முறை
யென்றமாதாவென்றும் பயின்று வளர்க்கப்பட்ட பிள்ளையென்றும்

தமக்கை யென்றும் தம்பி பெண்சாதி யென்றும் தமையன் பெண்சாதியென்றும் வரன்முறையில்லை அந்தவேளையில் அதற்குவதுவானரஸ்திரீகள் கண்டால் தங்களிலே புணர்ந்துக்கொள்வோம் வாராய்ராமபத்திரா சர்வகுலத்தையும் அவருடைய முறைபோலே நிலைநிறுத்தி அறமென்னுந்தர்மநீதியாகிய ஆதுலர்சாலை ஓதுவார்க்குணவு பசுகாத்தல் சிரைச்சோறு பிறருயிர்மீட்டல் பிறர்மகவளர்த்தல் அய்யமிடுதல் தர்மப்பள்ளி அறவைப்பிணஞ்சுடுதல் நோய் மருந்துபஞ்சாங்கமோதல் தடாகம்வெட்டல் கூபங்குழத்தல் மார்க்கமண்டபங்கட்டல் சுத்தம் சுகிர்தம் நித்தியகர்மம் கெங்காஸ்நானம் அன்னதானம் வஸ்திரதானம் பூதானம் கோதானம் சொர்ணதானம் முதலியவுஞ்செய்து தேவாலயம் பிர்மாலயங்கட்டல் அன்னசாலைவைத்தல் தண்ணீர்ப்பந்தல்வைத்தல் யாகம்எக்கியம்செய்தல் அடைக்கலஞ்செய்தல் பூஞ்சோலைவைத்தல் இப்படிப்பட்ட முப்பத்திரண்டு தர்மங்களையும் பரிபாலனஞ்செய்துதர்மசாஸ்திரம்போலே இராச்சியபாலனஞ் செய்யப்பட்டவராது ஓய் ராமா நான் என்னுடையமற்கடம் ஆசாரம்போல் நடந்தேனேயல்லாமல் சுக்ரீபனுக்கு வேறேயொரு துரோகமுஞ்செய்யவில்லை-எ-து.

அவதாரிகை அதுகேட்டு ஸ்ரீராமர்சொல்லுகிறார்.

கவி நலங்கொடேவரிற் றோற்றினவரைக்
கலங்கலாவதோர் நன்னெறிக்காண்டவில்
விலங்கலாவது விலங்கியசூழ்கலால்
அலங்கல்மார்ப வடுப்பதிதன்றரோ.

இதன்பொருள், நலங்கொடேயுரிற்றோன்றிநவையற-எ-து.

வாராய்வாலி மகாநன்மையுற்றிருக்கிற சத்துருவிருத்தியோடுங் கூடியிருக்கிற தேவாதிகள் யாவர்க்கும் கர்த்தனாயிருக்கிற தேவேந்திரனுடைய புத்திரனாகப்பிறந்து வானரசிரேஷ்டனாகி கிஷ்கிந்தாபுரிக்கு அரசனாயிருக்கிற ஓவாலி நவமென்னுங் குற்றமானது சற்றுமில்லாமல்.

கலங்கலாவதோர் நன்னெறிகாண்டவில்-எ-து.

கலங்கலென்னும் அக்கியானமில்லாமல் புத்தி விசுவாசத்துடனே பாவமின்னதென்றும் புண்ணியமின்னதென்று பகுத்தறிந்து விவேகத்திலே புண்ணியகாரியங்களிலே மனதைச்செலுத்திப் பாபகாரியத்திலே மனதைச்செலுத்தாமலும் விவேகிகளான பெரியோர்களிருப்பார்கள் அவர்களுடையகாலங்கழிய ஒருநாள் அறுபதுநாழிகைநேரத்தையும் நான்குகூறாகச்செய்து போகபாகத்திலிரண்டு பாகமும் புராணசாஸ்திரவிஷயங்களிலே ஒருபாரமும் தெய்வபூசையிலேஒருபா

பாகமாக அப்பெரியோர்களுடைய மனதை நான்குகூறுகப்பகுத்திரு ப்பார்கள் அப்படிப்போல தர்மசாஸ்திரவிதியாக உன்மனமானதை நான்குகூறுக்கி ஒருபாகத்தை ஈஸ்வரபிரார்த்தனையான தெய்வபூசையிலேவிட்டு நான்கு கடலினுஞ்சென்று தேகசுத்திசெய்து பிரதிபிரமரூபத்தைஸ்தாபித்து திருமஞ்சன அபிஷேகததுடன் பத்திரபுஷ்பார்ச்சனைசெய்து ஜவகந்த புஷ்பதீபங்கொடுத்து அரிஅரிபரந்தாமா அன்பர்க்கெளியனே ஆதரவற்றவர்க்கருதியே யென்றுதிருமந்திரமாகிய அஷ்டாட்சரத்தை தியானித்து நன்மார்க்கத்தைச் சொல்லுகின்றவுவாலி.

விலங்கலாவது விலக்கிய சூழ்கலால்-எ-து.

நீயோவெனில் தேவேந்திரன் புத்திரனுகப்பிறந்து தேவகர்மத்தை தானேசெய்து புண்ணியமார்க்கத்தை இச்சித்திருக்கிறுய் ஆனபடியினுலே உன்னைவிலங்கென்றும் மிருகமென்றும் சொல்லக்கூடுமோ வாராய் வாலி அப்படி சற்சனனுயிருந்து விலங்கின் மார்க்கத்தை விட்டு துர்மார்க்கமாய் சுக்ரீபனை உபத்திரவம்செய்து பாதிராச்சியத்தையும் உரியமனைவியையும் அபகரித்துக்கொண்டாய் ஆனதினுலே.

அலங்கல்மார்ப வடுப்பதன்றரோ-எ-து.

அலந்த வெற்றிமாலையை மார்பிலே தரித்திருக்கும் சவுரியசாலியான வாலி நீ சுக்ரீபனுக்குத் துரோகஞ்செய்தது உனக்குச்சற்றும் முறைமையல்ல வாராய்வாலி-எ-று.

கவி. மாடுபற்றியிடங்கர்வலித்திடன்
கோடுபற்றியகொற்றவுர்க்கொய்வதார்
பாடுபெற்றவுணர்வின்பயத்தினுல்
வீடுபெற்றவிலங்கும்விலங்கதே.

இதன்பொருள். மாடுபற்றி யிடங்கர்வலித்திட-எ-து.

மாடென்னும் சமீபமாகக்கொண்டு இடங்கரென்னு முதலையும் கஜேந்திரனென்னும் யானையும் தங்களிலே சாபகாரணத்திலே போர்செய்து மோட்சம்பெற்றதுண்டு அதுயெப்படியென்றுல் ஆதிநாளையிலே இந்திரத்துய்மன் பாண்டியராசன் விஷ்ணு சாரூபம் பெறவேணுமென்று பர்வதத்தின்பேரிலிருந்து ஸ்ரீமந் நாராயணரைக் குறித்து சொரூபபாவனையுடனே என்கிற ஆனந்த புஷ்பஞ்சொரிய அஷ்டாட்சர மந்திரரூபனுன விஷ்ணுபகவானைச் சூட்சும போதத்தினுலே கண்டு தவஞ்செய்கிறபோது அகஸ்தியமுனியானவர் வந்தருளினுர்.

அவர்வருகிறதைக் கண்டெழுந்து இந்திரத்துய்மன் பாண்டிய ராசா வணங்காததினுலே கோபித்து அகஸ்தியரானவர் அந்த பாண்டியனைப்பார்த்து நீமதயானையாக பிறக்கக்கடவதென்று சபித்தார் அ

தை அரசன்கேட்டு விழித்துப் பார்த்தபோது அகஸ்தியரெனத்தெரிந்து வணங்கி அடியேனுக்குச் சாபவிமோசன மெப்போதென்று கேட்டான் அப்போது விஷ்ணுபகவானாலே இச்சாபந்தீருமென்று அகஸ்தியாருளிச்செய்து போனார் அந்தராசாவும் கஜேந்திரனாகப் பிறந்து அனேகயானைகளோடு கூடிச் சஞ்சரித்துத் திரிந்தது அக்காலத்திலே ஓடையென்னும் பொய்கையிலே காந்தர்வஸ்திரீகளும் ஊகூவென்னும் கந்தருவர் அந்தப்பொய்கைக் கரையிலேயிருந்து நித்தியகர்மமுடித்துக் கொண்டிருந்தார்.

அப்போது அந்தக்கந்தர்வனானவன் குனிந்துசென்று மகாரிஷியினுடைய காலைப்பிடித்துத் தண்ணீரிலேயிழுத்தும் பரியாசஞ்செய்தான் அப்போது தேவமகாரிஷி கோபித்து நீமதலையாகித்தண்ணீரிலே கிடக்கக்கடவதென்று சபித்தார் அப்போது அந்தக் கந்தர்வன் அடியேனுக்கு மோட்சம் எப்போதென்று கேட்டான் அதற்குக் கஜேந்திரனுடைய ஏதுவாக விஷ்ணுசக்கரத்தினாலே உனக்கும் மோட்சம் லபிக்குமென்று சாபவிமோசனம்சொன்னார் அப்படி சிறிதுகாலங்கழித்து கஜேந்திரனானவன் தண்ணீர்குடிக்கச்சென்று பொய்கையிலிறங்கிச் சலங்குடிக்கிறபோது அந்தமுதலையானதுவந்து கஜேந்திரனுடைய காலைப்பிடித்துக்கவ்வி தண்ணீரிலே யிழுக்கவும் சகாயமாய்வந்த பிடியானைகள தெரிந்துபிடித்து இழுக்கவும் முதலையானதுவிடாமல் தண்ணீரிலேயிழுக்கவும் நீர்வாழுஞ்சாதிக்குக் கரையில்பலமாதலால் இப்படி ஆயிரம்வருஷம்வரைக்கும் போர்செய்து கஜேந்திரன்பயந்து பசிதாகத்தினாலே மெலிந்து நிர்வகிக்க மாட்டாமல்.

கோடுபற்றிய கொற்றவர்க்கொய்தநோய்-எ-து.

அந்தயானையானது ஆபத்காலத்திலே உதவி செய்யப்பட்டவர் ஸ்ரீமந்நாராயண பகவானென்றறிந்து ஆத்மபோதம்பிறந்து சகஸ்திரநாமதாரியானதால் அந்தஸ்ரீமந்நாராயண மூர்த்தியைதியானித்து ஆதிமூலமே அபயமெனக்கூவிக்கோடென்று சொல்லப்பட்ட பாஞ்சசன்னியமான சங்கைதாங்கியிருக்கிற விஷ்ணுபகவானை நினைத்து முறையிட்டபோது.

பாடுபெற்ற வுணர்வின்பயத்தினால்-எ-து.

வைகுந்தபதியான நாராயணருக்குப்பத்தாள்பேரில் அன்பானபடியினாலே கஜேந்திரனைக்காத்தருள வேணுமென்றுநினைத்து அந்தமதயானையினுடைய ஈடுபாடுகண்டு சங்குசக்கிரம் கதாசாரங்கமென்னும் பஞ்சாயுதத்துடனே கருடவாகனத்தின்பேரிலே கருடத்துவஜத்தோடும் நீலமேகமண்டலசொரூபமாகிய ஸ்ரீமந்நாராயண மூர்த்தியானவர் எழுந்தருளிவந்துகஜேந்திரனை பயப்படாதேயென் றபயஸ்தங்கொடுத்தருளிச்சக்கிராயுதத்தினாலே கரகரவென்று முதலையைசங்கரித்த

போது அதுசாபந்தீர்த்துகந்தர்வனுன முன்னுருவமாகித் துதிசெய் து போனுன் பின்புகஜேந்திரனுனவனுக்குச் சாரூபசுபத்தைக்கொடுத்தார் வாராய்வாலி அந்த கஜேந்திரனென்னும் யானையானது மிருகமாயிருந்து உணர்வென்னும்அறிவினுலே போகபோக்ய ஸ்வரூபமான விஷ்ணுமயமாகிய நிரஞ்சனவஸ்துவான பகவானைத் துதித்தபடியினுலே.

வீடுபெற்ற விலங்கும் விலங்காதே-எ-து.

மோட்சவீடான வைகுந்தபதத்தை அடையப்பட்ட கஜேந்திரனுனவனைவிலங்கென்றும் மிருகமென்றுஞ்சொல்லப்போகுமோ வாராய்வாலி மிருகத்துக்கோவென்றால் தொண்ணூற்ருரு கருவிகளில்லை அப்பேர்ப்பட்ட மிருகங்களுக்குப் பாவபுண்ணியம் குணதோஷமென்பது அந்தக்கரணபூதங்களிலே அரியவேண்டியது இந்தசக சன்மார்க்கமும் உன்னி...த்திலே யிருந்தபடியினுலே உன்னை மிருகயோனியிலே சன்மித்தவனென்று சொல்லக்கூடாது வாராய்வாலி ஆகையினுலேஉன்னைச் சிட்சைசெய்தேன்-எ-று.

கவி. தக்கவின்ன தகாதனவின்னதென்
ரொக்கவென்னல ராகியபாந்துளோர்
மக்களில்விலங் கேமெனுவின்னெறி
புக்கலேயிவ் விலங்கும்புத்தேளிரே.

இதன்பொருள் தக்கவின்ன தகாதனவின்னதென்-எ-து.

தருமானகாரியமின்னது தகாதகாரியமின்னது அடுக்குங்காரியமின்னது பாவமின்னது புண்ணியமின்னதென்றுசொல்லப்பட்ட.

ஒக்கவென்னலராகியுயர்ந்துளோர்-எ-து.

இந்தவிவேகம் வரவேணுமென்பதேயானுல் பூர்வபுண்ணியவாசனையிலே சற்குணம்பிறந்து அட்சரக்கியானந்தோன்றி சாஸ்திரபூர்ணங்களினுடைய அர்த்தசாரங்களை யறிந்தால் அப்போது தர்சனவிருத்திபோல் சற்சனசாவகாசம்வரும் சற்சனசாவகாசம் வந்தால் பக்தி விசுவாசம்வரும் பக்திவிசுவாசம்வந்தால் அக்கியானம்போம் அக்யானம்போனுல் ஞானபோதம்வரும் ஞானபோதம்வந்தால் சூட்சமபோதம் வரும் சூட்சமபோதம்வந்தால் சொரூபக்கியானம் வரும் சொரூபக்கியானம்வந்தால் அரூபஞானம் தெரியும் அரூபஞானந்தெரிந்தால் சித்தாந்தநிலையும் வேதாந்தநிலையும் மந்திரநிலையு மின்னதென்றுந் தெரியவரும் அப்படிதெரிந்தபோ தக்கியானனுகிய பஞ்சகர்த்தாக்களையும் பஞ்சகிருத்தியங்களுந் தெரிந்த சராசரப் பிரபஞ்சங்களாகிறதும் அழிகிறதுமான சர்வவியாபகங்களையு மறியப்பட்ட விற்பலம் வரும் இதையெல்லாம் சற்காமமென்கிற நித்தியவிரத்தியான அனுஷ்டான் கருமங்களைத் தவருமலும் அனுஷ்டித்துக் கொண்டுவந்தால்

ச்கலவிவேகமும்வரும் ஆகையால் நீயோவென்றால் கிரிகையான பூசா விதகர்மத்திலே உட்பட்டவனானபடியினாலே நீ துராசாரஞ் செய்யக் கூடாதே வாராய் வாலி பாவம்வந்து சமபவிக்கிறதும் பாவம்நிவர்த்தி செய்கிறதுமான உனக்கு சுக்கிரீபனை உபத்திரவஞ் செய்வது தூர்க் கருமமே வாராய்வாலி இப்போர்க்கொத்த வேதங்களை யறிந்தவன்மா த்மாவாகும் ஆனபடியினாலே,

மக்களும்விலங்கேமெனும்வின்னெறி-எ-து.

மக்களென்று சொல்லப்பட்ட மனுஷனாலும் விலங்கென்னும் மி ருகமானாலும் மனுவிக்கியான தருமமான சாஸ்திர விதியையரிந்து நரகவரனையும் சொர்க்கவரனையும்.

புக்கதேயிவ் விலங்குபுத்தேளிரே-எ-து.

வாராய் வாலி சகல விவகாரம் குணம் கர்மங்களும் அவரவர்க்கு டையபடி நடக்குமென்பதுதோற்றி ஜீவாத்மாவென்றும் பரமாத்மா வென்றும் சொல்லப்பட்ட இரண்டுவிதங்களுந் தெரிந்து ஆத்மாநேச வல்லப மல்லவென்றும் தெளிந்தவன் மிருகமானாலும் அவன் தேவ னுக்குச் சமானமாவான் இது வேதசாஸ்திர புராணவிதிகளும் அனு பவமாகும் ஆனபடியினாலே தூர்மாக்கம் ஒருவரும் செய்யக் கூடாது அப்படிப்பட்டவர்களை அனுசரிக்கக்கூடாது அவர்களை ராஜசிட்சையி னால் கண்டித்து நிலைநிறுத்தவேணும் வாராய்வாலி.

கவி. அனையகாதலி லெங்குலத்தியாவர்க்கும்
வினையினால்வரு மேன்மையுங்கீழ்மையும்
அனையத்தன்மை யறிந்துமயர்த்தனை
வனையுமாட்சியும் வன்புயவாலியே.

இதன்பொருள்.

அனையகாதலி லெங்குலத்தியாவர்க்கும்-எ-து.

முன்சொல்லப்பட்ட தர்மநீதியானது பூர்வசென்மத்திலேசெய்ய ப்பட்ட பாவபுண்ணியத்திற் தொடர்ச்சியாகிவரும் எங்குலமென்னு ம்மனுஷ்யோனியிலே செனித்ததேயானாலும் தேவயோனியிலேஜெ னித்ததேயானாலும மிருகயோனியிலே ஆத்ம போதத்தோடே ஜெ னித்ததேயானாலும்.

வினையினால்வரு மேன்மையுங்கீழ்மையும்-எ-து.

அவரவர்செய்யப்பட்ட வினையென்பது நல்வினையென்பதும் தீவி னையென்றும் இரண்டுவிதவர்க்கம் அதில் நல்வினைவர்க்க மென்பது தானதவம் ஈவு இரக்கம் பத்தி விசுவாசம் சத்தியம் தெய்வப்பூசை

அன்பு ஆகாரம் சுத்தம் துதிநேத்திரம் தீர்த்தயாத்திரை தெய்வதரிசனம் பெரியோரைக்காணல் சற்சனசாவகாசம் கல்வி ஒழுக்கம் நல்லோரைச் சேர்தல் பிராமணவிசுவாசம் குருவிசுவாசம் தயவு தாட்சணியம் இப்படிச் சொல்லப்பட்ட நல்வினை மார்க்கம்செய்தால் மேன்மையென்னும் பெருமையும் கீர்த்தியும் சம்பத்தும் தீர்க்காயுசுமோட்சமும் மென்மேலாக லபிக்கும் தீவினைவர்க்கமென்பது ஆங்காரம் கெர்வம் நிந்தனை துர்வித்தி துர்ச்சனசாவகாசம் நிர்த்தாட்சண்ணியம் அசத்தியம் அசுத்தம் பரஸ்திரீசங்கம் பரதாரமோகம் பரதிரவிய விருப்பம் கோள்சொல்லல் வஞ்சனைபில்லி சூனியம் கொலைசெய்தல் களவுசெய்தல் பெரியோரைப் பழித்தல் தெய்வநிந்தனை பிரமநிந்தனை புராணநிந்தனை அழுக்காறு குருநிந்தை கர்த்தருரோகம் விசுவாசபாதகம் அநீத அதர்மம் இப்படிப்பட்டதெல்லாம் தீவினைவர்க்கமாம் அதனாலே அவமானம் அபகீர்த்தி அற்பாயுசு மகாதுரோகம் தரித்திரத்துக்கம் லபிக்கிறதுமல்லாமல் மேலைக்கு நரகமும் லபிக்கும் வாராய் வாலி.

அலையதென்மை யறிந்துமயர்த்தனை-எ-து.

இப்படிச் சொல்லப்பட்ட இருவினைப்பயனால் வரப்பட்டது பாவமும் புண்ணியமும் அதினாலே அனுபவசுகமும் துக்கமும் ஆதலால் அவரவர் செய்யப்பட்ட பாவபுண்ணியம் சென்ம சென்மத்துக்கும் தொடர்ச்சியாகிவரும் வாராய்வாலி இந்த வரவுபோக்கு அறிந்து அனுபாகனாயிருந்து தன்மையுடையவனாகிய நீயும் மறைந்துசெய்தாய் இப்படிப்பலவீனனாகிய சுக்ரீபனுக்குத் துரோகம்செய்தபடியினாலே.

வானைமாட்சியும் வன்புயவாலிலே-எ-து.

மகாபுத்திசாலி அறிவாகரன் பராக்கிரமசாலி யாகையால் வாராய் வாலி நீ சகோதரதோஷம் செய்யலாகாது செய்தபடியினாலே உன் பேரிலே அஸ்திரந்தொடுத்துன்னைச் சிட்சைசெய்தேன்வாராய்வாலி.

அவதாரிகை.

என்றிப்படி ஸ்ரீராமர் சொல்லக்கேட்டு வாலிசொல்லுகிறான்.

கவி.

அவ்வுரையதனைக்கேட்டே னரிகுலத்தரசேநீயும்
செவ்வியயனையதாகச் செருக்களத்திருச்செய்யாமல்
வெவ்வியபுளினதென்ன விலங்கினைமறைந்துவில்லா
லெவ்வியமென்றோநீயக் கெனக்குரைத்தருளுவாயே.

இதன்பொருள்.

அவ்வுரையதனைக்கேட்டே னரிகுலத்தரசேநீயும்-எ-து.

ஓய்ராமா நானொருவசனஞ் சொல்லுகிறேன்கேள் இந்நேரம்வரைக்கும் என்னுடைய பூர்வீகமும் தர்மசாஸ்திரவழியும் அனேகவிதமாகச் சொன்னாய் ஆனபடியினாலே சுக்ரீபனுடைய நாடுராச்சியமும் அடக்கி அவனது உரிமை ஸ்திரீயையும் அபகரித்தது என்பேரில பசாரந்தான் ஓய் அரிகுலமென்னும் ஆதித்தன் மரபிலேவந்து உற்பவித்து தர்மசிந்தனையோடு கூடியிருக்கிறவரான ராகவேஸ்வரா உன்னை ஒருவசனங்கேட்கிறேன் வாராய் ராமா.

செவ்வியேயனையதாகச் செருக்களத்துற்றபோது-எ-து.

செல்வியென்னும் வெற்றியுங்கண்ணும் நேர்பாடாகநின்று யுத்தகளத்திலே வந்து என்னைப்பார்த்து நீ சுக்ரீபனைக் கஷ்டப்படுத்தினதினாலே அந்த சுக்ரீபன் என்னிடத்தில் வந்து அடைக்கலம் புகுந்தான் ஆகையால் க்ஷத்திரிய தர்மத்துக்கு அடைக்கலங் காத்து துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ் செய்யவேண்டிய கடமை யாதலால் உன்னைச் சிட்சை செய்கிறேனென்று எதிர்த்து நின்று அஸ்திர சஸ்திரங்களைத் தொடுத்து வதைசெய்கிறதல்லவோ முறைமையாகும் வாராய் ராமா அப்படிசெய்யாமல்,

வெவ்வியபுளினரென்ன விலங்கினை மறைந்துவில்லால்-எ-து.

வெவ்விய கொடூரமான பாபிஷ்டனாகித் தன்னுடைய பசிதாகம் பெரிதென்று எந்நேரமும் கொலைபாதகங்களாகிய மிருகவதைசெய்து வேட்டையாடுகிறதற்குள் பாசவலையும் கவண்கல்லும் வளைதடியும்வாங்குவல்லயமுமெடுத்து தூணிதூக்கிப் பாணமெடுத்து வில்லைவளைத்து மெருவிலே மிருகங்கள் பறவைகள் அகப்படாமற்போனால் செடிகளிலே மரங்களிலே மறைந்துநின்று நிக்கிரகம்செய்து அவற்றினுடைய மாமிசத்தைப் பட்சித்துக்குட்சிபாதையை அடக்கிக்கொள்வார்கள் ஆனபடியினாலே,

எவ்வியதென்னேநீயுங் கெனக்குரைத்தருளுவாயே-எ-து.

அந்தக் கிராதசைப்போல் விருட்சத்தில் மறைந்துநின்று என்பேரிலே பாணந்தொடுத்த காரணமென்ன அதைச் சொல்லவேணும் வாராய் ராமா தர்மநீதியுள்ள ராசாதிராசேந்திரனாகிய நீ ஒளிபாணந்தொடுக்கலாமோ அந்த உதாரணத்தைச் சொல்லவேணும் வாராய் ராமா.

அவதாரிகை.

என்றிப்படி வாலிசொல்லக்கேட்டு இலட்சுமணர் சொல்லுகின்றார்.

கவி.

முன்புநின்றம்பிவந்து சரண்புகமறையிலோரைத்
தென்புலத்துய்ப்பனவென்று செப்பினேனுஞ்செருவினீயும்
அன்பனதுயிர்க்கக வடைக்கலமியானுமென்னில்
என்பதுக்குறுதிவள்ளல் மாமறைந்தெய்ததின்றே.

முன்புநின்றம்பிவந்து சரண்புகமறையிலோரே-எ-து.

வாராய் வாலி உன்பேரிலே மரத்தில்மறைந்து அஸ்திரந்தொடுத்தகாரணம் எதினாலென்றால் நாங்கள் கோதாவரிக் கரையிலே யிருந்து மகாலட்சுமியாகிய சீதையைத் தேடிவந்து பம்பையாற்றைக் கடந்து தென்பால் வருகிறபோது உன்தம்பியான சுக்ரீபன் வாலியானவன் என்னுடைய நாடுநகரத்தையும் உரிமைஸ்திரீயையும் அபகரித்துக்கொண்டு என்னையுங் கொல்லவேணுமென்று லோகத்திலே ஒருவிடத்திலு மிருக்கவொட்டாமல் என்னைப் பிராணவதைசெய்கிறான் ஆதலால் நீங்கள் அடைக்கலங் கார்க்கவேணுமென்று அவனபயப் புகுந்தபடியினாலே முறையென்று சொல்லப்பட்ட நெறிமுறை ஆசாரத்தைவிட்டுக் கிர்த்தியா கிர்த்தியமில்லாமல் துராகாரம்செய்யப்பட்ட துஷ்டரெவர்களையும்.

தென்புலத்துய்ப்பனென்று செப்பினன்செருவினீயும்-எ-து.

அபகிர்த்தியஞ் செய்யப்பட்ட பாபிஷ்டர்களைக் கொன்று சத்துக்களை இரட்சிக்கத்தக்கதாக வந்திருக்கிறோம் ராசதர்மத்தை நிலைநிறுத்த நினைத்து துஷ்டதனம் செய்யப்புட்ட வாலியைக்கொன்று உனக்கு ராச்சியத்தையும் உருமைஸ்திரீயையும் மீட்டுத் தருகிறோமென்று சத்தியவார்த்தை சொல்லியிருக்கிறோம் ஆனபடியினால்.

அன்பனதுயிர்க்காக வடைக்கலமியானுமென்னில்-எ-து.

காரியார்த்தம் இப்படி யிருக்கின்றபடியினாலே உன்னோடெதிர்த்து சுவாமியானவர் போர்செய்து உன்பேரிலே அஸ்திரந்தொடுத்ததேயுண்டானால் நீ வானரசென்மமாதலால் பிராணபயமும் அவதைரியமும் லச்சையும் உங்களுக் கதிகமாயிருக்கும் அப்படி யிருப்பதாலறிவும் ஆகமமுந் தெரிந்து சுவாமியினுடைய காரணார்த்தங்களை யறிந்து சுக்ரீபன் வந்தடுத்து அபயம்புகுந்தால் அந்தச் சுக்ரீபனைப்போல நீயும் உன் சவரட்சணைக்காகச் சுவாமியினுடைய பாதாரவிந்தத்திலே விழுந்து அடைக்கலம் புகுந்ததே யுண்டானால் உன்னை வதைசெய்யப் போகாது வாராய் வாலி,

என்பது கருதிவள்ளல் மாமறைந்தெய்ததின்றே-எ-து.

இந்த விஷயங்களை யறிந்தே விருட்சத்தில் மறைந்து நின்று அஸ்திரந் தொடுத்தார் வாராய் வாலி அல்லாமலும் நீ மற்கடவினமானபடியினாலும் தனுர்ப்பமுள்ளவனானபடியினாலும் ராசதத்துவமுள்ளபடியினாலும் பீடிக்கப்பட்டவனானபடியினாலும் பக்திசிரத்தை யுண்டானபடியினாலும் சுக்ரீபனுடனே சொன்ன சத்தியம் நிலைநிற்கத்தக்கதாகவும் ராசநீதமானது [illegible]ததான தண்டமென்னும் சதுர்வித

வுபாத்தினல் நிவர்த்திக்கவேண்டிய படியினலும் சமயாசமயமாகிய இரண்டுவழியும் யோசித்து அஸ்திரந்தொடுத்தார் வாராய் வாலி பல விதத்திலும் உன்பேரிமேல் கொடுக்கும்படி விவகார மிருந்தபடியினல் இந்தக்காரியம் செய்தார் வாலி-எ-று.

அவதாரிகை.

என்றிப்படி லட்சுமணர் சொல்லக் கேட்டு வாலியானவனுக்கு அறிவுதோன்றி ஸ்ரீராமரை ஞானபோதத்தினலே தெரிந்து சொல்லுகிறான்.

கவி.

தாயெனவுயிர்க்குநல்கித் தருமமுந்தகையுஞ்சார்பும்
நீயெனநின்றிநின்பா நெடிதுநின்னேக்கநேர்மை
நாயெனநின்றவெண்பா னகையுறவுணரலாமோ
தீயனைப்பொருத்திசெய்ய தாமரைச்செல்விமார்பா.

இதன்பொருள்.

தாயெனவுயிர்க்குநல்கித் தருமமுந் தகையுஞ்சார்பும்-எ-து.

சரணஞ்சரணம் வாராய் ராமபத்திரா மணிமகாகுண்டலப்பிரபுராசாபிஷேகமான ஸ்ரீமந்நாராயணசரணம் அஷ்டலட்சுமியாகிய சீதாலட்சுமி சமேதரான ராமபத்திராசரணம் வைவசுதன் றனக்காக நீர் தனில் மறைந்து அவர்க்கருள்கொடுத்தவா சரணம் மச்சகூர்மவராக நரசிங்கமான நாராயணசரணம் ராமாராமதேவா ராமச்சந்திரா பரப்பிரம்ம சொரூபா வேதவேதாந்தவேதியா அகிலாண்டகோடி பிரம்மாண்டநாயகா அபயம் அபயம் வாராய் சுவாமி தேவரீருடைய பிரஸ்தாபமெப்படியென்றால் தாயென்று சொல்லப்பட்ட மாதாவைப்போலே சிசப்பிராயமான குழந்தைகளை அன்போடுங்கூட்டி பசிதாகங்களறிந்து அமுதூட்டி இரட்சிக்கிறதுபோல இந்தலோகத்திலுண்டான எண்பத்துநான்கு லட்சம் சிவப்பிராணிகளையும் அவரவர்க்கு வேண்டிய அன்னபானதிகள் முதலான பட்சங்களைக்கொடுத்து காக்கப்பட்ட கர்த்தன சுவாமி தேவரீர் தயாளதர்மத்துடனே சொரூபகாரணமும் சாஸ்திரவிதியையும் முப்பத்திரண்டு தர்மங்களையும் நிலைநிறுத்திச் சகலரையுந் தயவுடனே இரட்சிக்கப்பட்டவர் தேவரீர் தானே வாராய் லோகநாயகா.

நீயெனநின்றவென்பா நெடிதுநின்னேக்கநேர்மை-எ-று.

இப்படிக்குச் சகாயமாயும் லோகபரிபாலனகியும் இருக்கப்பட்ட உமதுமேன்மையும் கிருபையும் வாராய் சுவாமி.

நாயெனநின்றவென்பா ன[illegible]னவுணரலோ-எ-து.

நாயென்ற வடியார்க்கு மடியார்க்குக் கீழ்ப்படிந்து தேவரீருடைய பக்தனுயிருக்கிற என்பேரிலே கடைக்கண் பார்வையாகப் பார்த்துப் பட்சம்வைத்து இவன் மற்கடவினமாகுமென்று பரியாசஞ்செய்து அசட்டையாய் நிந்தனைசெய்யாதபடிக்கு.

தீயனைப்பொருந்திசெய்ப தாமரைச்செல்விமார்பா-எ-து.

வாராய் ராமச்சந்திரா தீவினையென்பதாகிய அடியேன் முன்செய்யப் ட்ட பாபங்களையகற்றிக் குற்றங்குறைபாடுகளைப் பொறுத் தடியேனைக் காத்து ரட்சிக்கவேணும் வாராய் கர்த்தனே செந்தாமரைப் புட்பத்திலே வாசஞ்செய்யப்பட்ட இலட்சுமிமார்பனுன் சுவாமி சரணம் சரணம் வாராய் ராகவேஸ்வரா வாராய் ராமதேவா வேதமூர்த்தியாகிய பரமயோகி தற்பரசொரூபராசலட்சுமி பிரபுவே ராமபத்திரா சரணம் கோதண்டராகவா கோசலாபுரி ராசராசேந்திரா சர்வஜீவதயாபரா சர்வலோககாயகா ஜானகிகல்யாண மனேகரா சரணம்சரணம் வாராய் ராகவா-எ-று.

கவி

இரந்தனனடியேனெந்தா யாவதுமறிதற்நேற்றுக்
குரங்கெனகருதிநாயேன் கூரியமனத்துட்கொள்ளேல்
அரந்தையாம்பிரவிநோய்க்கு அவிமருந்தனையவையா
வரந்தகும்வள்ளலேநீ கேட்டருண்மகிழ்ந்துமன்னே.

இதன்பொருள்.

இரந்தனனடியேனெந்தா யாவதுமறிதற்றேற்று-எ-து.

தேவரீரிடத்திலே யிருந்து யாசித்துச் சிறிது அவருட்பாடுகேட்டுக் கொள்ளுகிறேன் வாராய் சுவாமி ஒன்றுமொன்று அறிவில்லாமல் அதிமந்தங்கொண்டிருக்கிற,

குரங்கெனக்கருதிநாயேன் கூறியமனத்துட்கொள்ளேல்-எ-து.

மிருகயோனியாகிய மற்கட குலத்திலே பிறந்து அறிவில்லாத நிர்மூடனுகி யிருக்கப்பட்டவனென்று கருதி அடியேன் சிறிது உதாசினமான வார்த்தைகளைச் சொல்லியிருந்தபோதிலும் மற்கடவங்கிஷமாதலால் விவேகமில்லாமல் சொன்னுனென்று திருவுள்ளத்திலே கருதிக்கொள்ளவேணும் அடியேன்பேரில் பாசகுற்றம் விசாரிக்கலாகாது வாராய் ராகவா அதுவுமல்லாமல்,

அரந்தையாம்பிரவிநோய்க்கு அருமருந்தனையவையா-எ-து.

லோகத்திலே சொன்ன சாகரத்தினுடைய கொள்கை எப்படிப்பட்டதென்றால் சரீரமானது அன்னமயகோசத்தினலே யெடுக்கப்பட்ட விகாரமானது அது அன்னமயம் பிராணமயம்மனேமயம் விக்கியானமயம் ஆனந்தமயமென்கிறது பஞ்சகோசத்தினுலே மூடப்பட்டது சுக்கில சுரோணிதமோவென்றால் அவரவர் பொசிக்கப்பட்ட அன்னபதார்த்த ரசவர்க்கங்களெல்லாம் பொசித்த பதினைந்து நாழிகையில்

மலசலமாகப் பிரிந்து அந்தச்சலத்திலே ஏழுகூறில் ஒருகூறு ரெத்தமாகித் தொண்ணூறு நாழிகையில் அந்த இரத்தம் சும்பத் தாதுகளிலும் பிரிந்து பின்னுந் தொண்ணூறு நாழிகையில் சுக்கிலமாக மாதாவும் பிதாவும் ஸ்திரீபுருஷ சம்போகத்திலே யிருந்து இரண்டுபேருஞ் சங்கமஞ்செய்த ஆலிங்கன லீலாவிநோதத்திலே விந்துவாகிய சுக்கிலம்பெருகி அந்தச் சுக்கிலத்தோடே பிராணவாயுவுங் கலந்து ஸ்திரீயினுடைய கெற்பத்திலே அறுகம்பில்லின் முனையிலே பனிநீர் தங்கும் பிரமாணமாய் பாய்கிறபோது முன்செய்யப்பட்ட பாவபுண்ணியமாகிய-இரண்டும் அந்தப் பிராணவாயுவினால் சீவனோடேகூடிக் கெற்பக்குழியிலே சுக்கில சிரோணித சம்பந்தமாகி நேசித்துக் கருவிலுறையும் அந்த இருவினையானதும் அந்தக் கருவோடுவுறந்து கருவாகி வுருவாகி யெடுக்கப்பட்ட சென்மபாவவினையாய் சுகதுக்கமாகிப் பாவபுண்ணியங்களை அனுபவிக்க வேண்டிவரும் அந்த செனனமானது ஒடுங்காமல் இறந்தும் பிறந்தும் சகடம்போலும் காற்றாடிபோலும் தொடர்ச்சியால் வரும் ஆனபடியினாலே ஜெனனமரணமானது ஒருகாலத்திலேயும் ஒடுங்காதே வாராய் சுவாமி இப்படித்தொடர்ந்துவரப்பட்ட பிறவி நோயானது தீர்ந்து அழியாதபதம் பெறவேணுமானால் தேவரீருடைய காரணசொரூபத்தைக்கண்டு தெரிசனை செய்யவேணும் அப்படித் தரிசனஞ்செய்வதற்குக் காரணகுரு தெரிசனமாகவேணும் அதனால் தத்துவக்கியானமும் அதனாலே ஆத்தும்போதமும் வரவேணுமந்தமார்க்கம் எப்படியென்றால் பிரிதிவு அப்புதேயுவாயு ஆகாயம் ஆகபூதம்-௫-சுரோத்திரம் தொக்குரட்சு சிங்குவை ஆக்கிராணம் ஆக பொறி-௫-சத்தம் பரிசம் ரூபம்ரசம் கந்தம் ஆக பலன்-௫-வாக்குவாதம் பாணிபாயுரு உபஸ்தம் ஆக கன்மேந்திரியம்-௫-வசனம் காமனம் தானம்விரசாகம் ஆனந்தம் ஆககனம்விஷயம்-௫-மனம் புத்தி சித்தம் ஆங்காரம் ஆக அந்தக் கரணம்-௪-இடைபிங்கலை சுழிமுனை காந்தாரி குருசங்கினி அலம்புடை புருஷன் சிங்குவை அத்திரி ஆகநாடி-௰-பிராணன் அபானன் வியானன் உதானன் சமானன் நாதன்கிரிகரன் கூர்மன் தேவதத்தன் தனஞ்சயன் ஆகவாய்வு-௰-ஆமாசயம் பக்குவமாசயம் மலவாசயம் ஜலவாசயம் சுக்கிலவாசயம் ஆக ஆசயம் அன்னமயம் பிராணமயம் மனோமயம் விக்கியானமயம் ஆனந்தமயம் ஆககோசம்-௫-மூலாதாம் சுவாதிஷ்டானம் மணிபூரகம் அனாகதம் விசித்தி ஆக்கினை ஆக ஆதாரம்-௬-அக்கினிமண்டலம் ஆதித்தமண்டலம் சந்திரமண்டலம் ஆகமண்டலம்-௩-ஆணவம் மாயை காமியை ஆக மலம்-௩-வாதபித்தம் சிலேத்துமம் ஆகதோஷம்-௩-அர்த்த ஈஷணை பத்திரா ஈஷணை ஆக ஈஷணை-௩-தாமதம் ராசதம் சாத்துவிதம் ஆக்குணம்-௩-காமம் குரோதம் மோகம் லோபம் மதமாச்சரியம் இடும்பை ஆங்காரம் ஆக சிவகுணம்-௮-சாக்கிரம் சொர்ப்பனம் சுழுத்தி

துரியம் துரியாதீதம் தொண்ணூற்று தத்துவ விபரங்களை யறிந்து தேகமும் தேகியும் வேறுபடுததிச் சச்சுதானந்த ஸ்வரூபமாகிய ஆத்துமாவைத் தரிசிப்பார்கள் அந்தவுண்மை ஞானிகள் உம்முடைய பாதாமரைத் தரிசனைசெய்து மேலாகிய பதத்தை யடைந்து பிறவிசாகரத்திலே யுட்படாமல் சாயுச்சியபதம்பெற்றுத் திருமூர்த்திகள் தேவாதிகளுடைய ஜனனமரணங்களையும் கண்டு வாழ்வார்கள் இப்படிப் பட்ட பிறவிநோய்க்கு சஞ்சீவிபோலிருக்கிறவரான சுவாமி.

வரந்தரும் வள்ளலேநீகேட்டருள் மகிழ்ந்துமன்னே-எ-து.

இப்படிக்கு மாயாரூபனாகிச் சகல சீவதற்பரனா யிருக்கிறவரான ராமபத்திரா அடியேன் உம்மைச் திறிதுவரங் கேட்கிறேன் தேவரீர் அடியேன்பேரிலே அன்புவைத்துப் பிரியமாகத் தரவேணும் வாராய் சுவாமி-எ-று.

கவி.

ஏவிகூர்வாளியா லெய்துநாயடியனேன்
ஆவிபோம்வேளையா யறிவுதந்துதவுவாய்
மூவர்நீமுதல்வனீ முற்றுநீமற்றுநீ
பாவுநீதருமநீ பகைபினேடுறவுநீ.

இதன்பொருள்.

ஏவிகூர் வாளியாலெய்துநா யடியனேன்-எ-து.

வாராய் ராகவேஸ்வரா மணிமகரகோடி ரவிதேசோமயவீர ராகவாசரணம் அவதார புருஷோத்தமா அகிலதவ சோபனமனுளாத சாதநந்தன கவுசலைகற்பதிவாசா அயோத்தியாபுரி மத்திய விஸ்வாமித்திர யெக்கரியப்பிரியா பகைசங்கரா அகலிகைமோட்சப் பிரதாபா திரியம்பகா அர்த்தநாரீசா சீதாசமேதா ரகுராமா சரணம் சரணம் வாராய்சுவாமி தேவரீர் மகாராஜபுத்திரனாகப் பிறந்தும் கர்த்தப்போக்கியனாய் எழுந்தருளியிருக்கிறீர் உம்முடைய வீரபராக்கிரமத்தினாலே பாரகோதண்டமான வில்லைவளைத்து ராமசகாயமென்னும் அஸ்திரத்தை யென்பேரிலே கொடுத்தருளினீர் அந்த அஸ்திரமானது என்மார்பிலே பட்டு.

ஆவிபோம்வேளையா யறிவுதந்துதவுவாய்-எ-து.

மூவர்நீமுதல்வனீ முற்றுமற்றுநீ-எ-து.

என்னுடைய தேகத்திலே யிருந்து ஆவியென்னும் பிராணன் பிரிந்துபோகிற சமயத்திலே புகுத்தரிவான் விவேகத்தைத் தந்தருள்வாயந்தப் போதக் கியானத்தினாலே பார்க்கிறபோது தேவரீருடைய பிறப்பு எப்படியெனில் மூவரென்று சொல்லப்பட்ட சிருஷ்டி திதிசங்காரமென்னும் மூன்றுதொழிலையும் நடத்தப்பட்டவரும் முதல்வனென்னுஞ் சர்வகாரணத்துக்கும் முதன்மையாகி யிருக்கப்பட்ட பரப்பிரம்ம வெளியாயிருக்குஞ் சிவப்பிரகாசமான கர்த்தனானவருந் தே

வரீர்தானே வாராய் சுவாமி மேலும் அந்தப்பிரமத்தினுடைய சாயை யிலேயிருந்து மாயையும் பிரமமும் கலந்து விந்துதோன்றி விந்துவி லே நாதந்தோன்றி நாதத்திலே சத்தந்தோன்றி சத்தத்திலே யிருந் து சாத்மீகமிராசதம் தாமதம் ஆகிய முக்குணத்திலே தாமதகுணத் தை விஷ்ணுரூபமாக்கி இந்த மும் மூர்த்திவடிவினாலே சிருஷ்டிக்கிற துஞ் சங்கரிக்கிறதுமாகி இந்த மூன்றுவிதத்தினாலே சராசரப் பிரப ஞ்சம் வர்த்தனையாகிறதும் இப்படித் தேவரீர் படைக்கப்பட்ட லோ கத்திலே விருத்தியென்னும் க்ஷயமென்றுந் தோஷமென்றும் ஆகிறது மல்லாமல்,

பாவமீதருமமீ பகையினோடுறவுநீ-எ-து.

சகலமாகிய இருவினைவர்க்கங்கள் பாவமாகியதும் புண்ணியமாகி றதும் பகையென்னுஞ் சத்துருவாகிறதும் மித்துருவாகிறதும் ஆகிய சகலமுந் தேவரீரேயாகும் நிறஞ்சனவஸ்துவாகிய சுவாமி.

கவி.

புரமெலாமெரிசெய்தோன் முதலினோர்பெறுவிலா
வரமெலாமுருவியென் வசையிலாவலிமைசா
லுரமெலாமுருவியென் னுயிரையேதுகாநின்
சரமலாற்பிறிதிவே றுதவுவரோதருமமே.

இதன்பொருள்.

புரமெலாமெரிசெய்தோன் முதலினோர்பெறுவிலா-எ-து.

வாராய் ராகவேஸ்வரா காசிகோசலை அயோத்தியா புரிவாசா பட்டாபிஷேகவிக்கின ஆரண்யகெமன குகன்சகாயா பரத்துவாசப் பிரியா சித்திரகூடாதிவாசா சீதாபதிக்கு ராமா சரணம் சரணம் வா ராய் சுவாமி,

முற்காலத்திலே தாரகன் வித்துருமாலி சயத்துவசனென்று சொல்லப்பட்ட மூன்றுபேரும் வயிராக்கிய தபசுசெய்து வரப்பிரசா தங்கள் பெற்று மகா சிவபத்தர்களாகிய அநேக சிவலிங்கத்தைப் பூ சைசெய்துக்கொண்டு ஆகாய பாதாதிலோகமென்னும் மூன்றுலோக த்திலேயும் அந்த மூன்றுபேருமிருந்து இராச்சியபாரஞ் செய்கிற கொடுமையினாலே தேவாதிகளுக்கு மேன்மேலுங்கஷ்டமுண்டாயின மையால் அவர்கள் செய்கிற கொடுரத்தைப் பரமேஸ்வரரானவர் தன் னுடைய திருவாயைத்திறந்து புன்னகைசெய்து அவர்களுடைய மூ ன்றுகோட்டையுடன் மூன்றுபேரையு மெரித்துச் சாபபலாகி தூளி தஞ் செய்தருளினார் அப்படிப்பட்ட சிவன்முதலிய விஷ்ணுவும் ராமா வும் திக்குப்பாலகரும் தேவாதிகளும் ஆகிய இவர்களொருவரும் எ ன்னோடே அபிமுகமாக நின்று போர்செய்யமாட்டார்கள் வாராய் ரா கவேஸ்வரா,

வரமெலாமுருவியென் வகையிலாவலிமைசொல்-எ-து.

ஆதியிலே சுமேதமாகச் சுமந்திரியாகப் பதினாயிரம் யானையினுடைய அநேக பலன் பெற்றிருந்த பிற்பாடு பஞ்சபூதத்தினாலே நான் கூ பூதத்தினுடைய பெலனும் எதிர்த்தவனுடைய பெலனிற் பாதியுமாக இதுவரைக்கும் யான் பெற்றிருந்தவரமும் வரப்பிரசாதங்களையும் ஊடுருவி வலிமை யென்னும் வல்லபத்தைப்பொருந்தி யிருக்கப் பட்டதாகிய.

உரமெலா முருவியென் னுரையேறுகாநின்-எ-து.

உரவமென்று சொல்லப்பட்ட அடியேனுடைய மார்பும் ஊடுருவி சத்தநாடிகளையும் தசவாய்வையும் பருகி அடியேனுடைய பிராண வாயுவையும் பகருகின்றபடியினாலே.

சரமலாற்பிரிதுவே றுளதரோதருமமே-எ-து.

இவ்வளவு தாருட்டியத்துடனே அடியேனுடைய பிராணனைப் பருகத்தக்கதாகத் தேவரீருடைய ராமபாணத்தினாலே முடியுமல்லாமல் மற்றொருவராயுதத்தினாலே முடியாது வாராய் சுவாமிவாராய் ராமச்சந்திரா.

அவதாரிகை.

என்றிப்படிசொல்லி ஸ்ரீராமரை வணங்கிச் சுக்ரீபனை யழைத்து வாலியானவன் சொல்லுகின்றான்-எ-று.

கவி.

மதவியல்குரங்குச்செய்கை மதிதொடுமாற்றிவள்ள
லுதவியையுன்னியாவி யுற்றறிந்துணரகிற்று
பதவியையெவர்க்குநல்கும் பன்னவன்பணிந்தயாவுஞ்
சிதைவிநோய்தீரச்செய்து தீர்தரும்பிரவிதீராய்.

இதன்பொருள்.

மதவியல்குரங்குச்செய்கை மதிகொடுமாற்றிவள்ளல்-எ-று

வாராய் தம்பி சுக்ரீவா இனிமேல் சுவாமியானவர் உனக்கு முடிசூட்டி ராச்சியபாரங் கொடுப்பார் ஆனபடியினாலே ஆசாரி பீடத்திலே யிருந்து வானரசைனியங்கள் சூழத்தக்கதாக ராசபோகத்தை அனுபவிக்கும்போது ராசமத மென்னுங் கர்வம் யாவருக்கும் வரும் வாராய் தம்பி பவிசபாக்கியம் தனதான்யம் சம்பத்துக்களைக் கண்டால் யாவருக்கும் ஆங்காரமும் மகிழ்ச்சியும்வரும் அப்படி உனக்கு வந்தவிடத்தில் மதியென்னும் புத்தியினாலே கீழ்ப்படுத்தி அறிவினாலே ஆண்மையானதைத்தள்ளி வள்ளலாகிய சிரேஷ்டம்பொருந்திய இந்த ஸ்ரீராமமூர்த்தியானவர் சொல்லப்பட்ட.

உதவியையுன்னியாவி யுற்றறிந்துணரகிற்றி-எ-து.

ராசகாலமும் மற்கட விருத்தியும் ஆகிய இந்த இரண்டையுந் தள்ளி ராகேஸ்வரர் செய்யப்பட்ட உதவியை எந்தநேரமும் விசா

ரித்து உன்னுடைய பிராணனுக்குப் பிராணநாயகனென்று விசாரித் தரியவேணும் சுக்ரீபா அதுவுமல்லாமல்.

பதவியையெவர்க்குமநல்லும் பன்னவன்பணித்தயாவும்-எ-து.

ஸ்ரீராமரானவர் இன்னமெப்படிக்கொத்தவரென்றால் சைவாகமத் திலும் வைஷ்ணவாகமத்திலும் மூலமந்திரமா யிருக்கப்பட்டவரென் றும் சொல்லுகிற பீஜாக்ஷர சொரூபரானவர் அந்த மந்திரத்தைத் தோத்திரஞ்செய்து வணங்கப்பட்ட பக்தஜனங்களுக்கு அவரவர் பிர யாசைப்பட்டு வணங்கின பலன்களுக்குத் தக்கதாகப் பலன்கொடுக் கப்பட்ட கர்த்தனாகிய இந்தச் சுவாமியானவர் பணிந்து சொல்லப்பட் ட பணிவிடைகளெல்லாம்.

சிதைவிநோய்தீரச்செய்து தீர்தரும்பிறவிதீராய்-எ-து.

சிதையுங் குற்றமில்லாதபடிக்கு குற்றேவல் செய்துக்கொண்டவ ருக்கு அடிமைப்பட்டிருப்பாய் அப்படிசெய்தால் ஆசாபாசத்தினாலே வரப்பட்ட ராசதத்துவேஷாதிகளினாலே வரும் இருவினைப் பயனால் பண்ணிய பாவத்திற் கீடாயெடுக்கப்பட்ட தீராதஜனன மரணத்தைத் தீர்த்து நாலாம்பதத்தைக் கொடுப்பார் வாராய் சுக்ரீபா நீ இராமத்தி யானம் பண்ணுவையே யானால் இம்மையிலே செல்வமும் மறுமையி லே மோக்ஷமும் உண்டாகும் வாராய் சுக்ரீபாவென்று சொல்லிப் பின் பு ராகவேசுரரை வணங்கிச் சொல்லுகிறான்-எ-று.

கவி.

ஓவியர்க்கருதாநாயே னுளதொன்றுபெறுவதுன்பால்
பூவியல்நறவமாந்திப் புந்திவேறுற்றபோது
தீவினையியற்றில்லையா யெம்பிமெற்சிறியன்மேலும்
ஏவியபகழியொன்று மெய்திடாவண்ணமன்றே.

இதன்பொருள்.

ஓவியர்க்கருதாநாயே னுளதொன்றுபெறுவதுன்பால்-எ-து.

ஓவியமென்னும் சித்திரத்தாலே எழுதுகிறவர்களுக் கரிதான ரூபலாவண்ணியம் பொருந்தி யிருக்கப்பட்ட சவுந்தரிய லட்சணம் பொருந்தியிருக்கின்ற கர்த்தனே தேவரீரிடத்திலே அபேட்சையாகி யொருவரங் கேட்கிறேன் வாராய் சுவாமி.

பூவியல்நறவமாந்திப் புந்திவேறுற்றபோது-எ-து.

தேவரீர் சுக்ரீபன்பேரிலே கருணைகடாக்ஷம்வைத்து இராச்சிய பாரங் கொடுத்தபோது கிஷ்கிந்தையிலே அவன் ராச்சியபாரஞ் செய் கிறநாளில் சரசவினையாட்டான் சல்லாபத்தினால் பூவென்னும் பல பல புஷ்பங்களினுடைய நறவென்னும் மதுக்களைப் போசித்து அந்தக்கர ணங்களின் தலைபிசகி ஆனந்தமயமாகி அந்த லாகிரியினாலே சத்திய பேதம் பிறந்து கிருத்திய அகிருத்தியங்கள் தெரியாமல் மந்தபுத்தியை யுடையவனாகி.

தீவினையியற்றில்லையாயெம்பிமேற்சிறியன்மேலும்-என-து.

தீவினை யென்னும் புத்திமோசத்தினாலே சிறிது குற்றங்குறைகள் அபசாரங்கள் செய்தார்களானாலும் என் தம்பியான சுக்ரீவன் பேரிலும் என் குமாரனான அங்கதன்பேரிலும் கோபமின்றி அவர்கள் புத்தியிலலாமல் ஏதேது குற்றங்கள் செய்தபோதிலும்.

ஏவியபகழியொன்று மெய்திடாவண்ணமன்றே-என-து.

அவர்களிரண்டுபேரிலும் என்பேரிலேவிய இந்தராமபாணத்தைத் தொடுக்கவேண்டியதில்லை தொடுத்தால் அவர்கள் தாங்க மாட்டார்கள் வாராய் சுவாமி இந்தவரமொன்று தரவேணும் சுவாமி.

அவதாரிகை.

இப்படி வாலியானவன் கேட்ட வரத்தைக் கொடுத்தருளிய பின்பு மறுபடியும் வாலிசொல்லுகிறான்-என-து.

கவி.

மற்றிலையெனினுமையா வரக்கனைகாலிற்பற்றிக்
கொற்றவாநினக்கடாந்து ருரக்கியடிமைசெய்ய
பெற்றிலகடந்துசொல்லிற் பயனிலைபிழைத்ததேனு
முற்றதுசெய்யவேண்டி லூரியரிலனுமனுள்ளான்.

இதன்பொருள்.

மற்றிலையெனினுமையா வரக்கனைவாலிற்பற்றி-என-து.

தேவரீருடைய திருப்புயத்திலே தாங்கியிருக்கிற இராமபாணம்பட்டு இறந்துபோகிறேனென்று சற்றுகிலும் வியாகூலமில்லை ஆனால் ஒரு சங்கடமுண்டு அதென்னவென்றால் அரக்கரென்னும் இராக்ஷசருக்கெல்லாம் கர்த்தனாகும்படி வயிராக்கியத்தினால் ஒன்பது சிரசையும் பதினெட்டுக் கரங்களையும் அறுத்து அக்கினியிலே யொழித்து பிரமதேவரிடத்தில் அநேக வரப்பிரசாதம் பெற்றுத் தென் சமுத்திரத்தின் மத்தியிலே எழுநூறு யோசனை விஸ்தாரத்துடன் இலங்காதீரமுண்டு அந்த ராச்சியத்திலே யிருந்த சாலன் குலிசன் காலங்கனமாலன் வருத்தன் வாயுகாலன் வச்சிரமுஷ்டி ஏச்சகோபன் உன்மத்தன் மதமத்தண்டை சண்டன் பிரசண்டன் பிபதங்கன் பரகல்தன் சூரியகேது சந்திரகேது தூமாட்சன் நாராக்ஷகன் மகாராட்சன் காலகேசன் யாகக் கண்ணன் வேள்வியின் பகவன் சூரியன் பகை வச்சிகேது துட்டன் பிசாசன் குருகேந்திரன் கும்பன் நிகும்பன் தேவாந்தகன் நராந்தகன் திரிசிரன் இப்படிச் சொல்லப்பட்ட படைத்தலைவரும் ஆயிரவெள்ளம் படையோடும் மந்திரிமார் பிரதானிகள் ஆமாத்தியரோடும் கூடியிருந்து திரிலோக நாயகனென்று பிரதாபங்கொண்டு மூன்று லோகத்தையுமடக்கி அநேக பிரஸ்தாபங்களை நடத்தப்பட்ட இராவணன் தேவரீருடைய தர்மபத்தினியான சீதாலட்சுமியைத் திருடிக்

கொண்டுபோய் சிறைவைத்திருக்கிற படியினாலே அந்த ராவணனுன வனை என்வாலினாலே பின்கட்டாகக் கட்டியிருக்கி.

கொற்றவா நினக்கடாந்து குரக்கியலடிமைசெய்ய-எ-து.

கொற்றவாற்றிப் பாடாவிய சவுரியபராக்கிரமம் பொருந்திய ராக வேஸ்வரா தேவரீரின் முன்பாகப் பாதகாணிக்கையாக வைத்து அடி யேனுடைய வானரசைனியங்களும் வாய்பதைத்துக் கைகட்டி நின்று பணிவிடை செய்யத்தக்கதாக.

வெற்றிலை கடந்துசொல்லிற் பயனிலைபிழைத்தேனும்-எ-து.

இந்தக் காரணத்தைச் செய்து பெருமை பெறுகிறதற்கு அடி யேன் பாக்கியம் பெறவில்லையே யென்னும் ஒரு சங்கடமேயல்லாமல் மற்றொரு சங்கடமுமில்லை வாராய் சுவாமி இனிமேல் யான் குற்றுயி ராய்க் கிடந்து சொன்னதினாலே ஒரு பிரயோசனமுமில்லை வாராய் ராகவேஸ்வரா,

உற்றதுசெய்யவேண்டி னுரியரிலனுமுள்ளான்-எ-து.

இனிமேல் இப்படிப்பட்ட காரண முடித்துத் தேவரீருக்குப் பி ரீதி வருவிக்கச் செய்யவேண்டுமானால் வானரராசாக்களுக்குள் அனு மந்தனானவன் உனக்குச் சகலமு முடித்துக் கொடுப்பான் வாராய் சுவாமி.

கவி.

அனுமனென்பவனேவாழி யையநின்செய்யவண்கைத்
தனுவெனநினைத்துமற்றைத தம்பியேதும்பிசால
வினிபொருதுணைமற்றில்லை யினியவரில்லையென்று
வனிதையைநாடிக்கொல்வீர் மலையினும்வளர்ந்ததோளிர்.

இதன்பொருள்.

அனுமனென்பவனேவாழி யையநின்செய்யவண்கைத்-எ-து.

வாராய் ராமபத்திரா அனுமனென்று சொல்லப்பட்ட வாயு புத் திரனான மாருதியானவன் எப்பேர்ப்பட்டவ னென்றால் திருப்பாற்கட லினும் வைகுந்தமென்னும் நகரத்தினும் அலங்கார புருஷனைக்கொ ண்டு பஞ்சாயுதபாணியாய் ஆனந்த சயனயோக நித்திரை யுடையவ ராய் ஜலரூபராய் ஜீவேசராய் சர்வயோக்கியராய் சர்வ பிராணிகளை யும் அவரவர்க்கு வேண்டிய பக்ஷணங்களைக் கொடுத்து ரக்ஷிக்கப்பட்ட இரட்சபோத துரந்தர நீதராய் இஷ்டானுவந்தரா யஷ்டாக்ஷர மந்திர ரூபமாகிய இரக்ஷ கர்த்தாவென்று பேருடையவராய் இருக்கப்பட்ட ஓய் ராவதேவா அவன் தேவரீருடைய திருக்கரத்திலே தாங்கி யிருக் கப்பட்ட.

தனுவெனநினைத்துமற்றைத் தம்பியேதும்பிசால்-எ-து.

உம்முடைய பராகோதண்டமான வில்லென்றே கருதவேணும் வாராய் சுவாமி என்தம்பி சுகரீபனானவனை உம்முடைய தம்பியாகிய இளைய சுவாமியென்றே நினைக்கவேணும் வாராய் ராகவேஸ்வரா.

இனியொருதுணைமற்றில்லையினியவரில்லையென்று-எ-து.

இவர்களிரண்டுபேரும் தேவரீருக்கு சகாயமாகி வந்த போதே இராவண சங்காரஞ் செய்கிறதற்கும் மகா லட்சுமியை சிறை மீட்டு இறதற்கும் வேறேயொரு சகாயம் வேண்டாம் வாராய் சுவாமியான படியினாலே சுக்ரீவன் முதலாகிய இருபத்தொரு ராசாக்களையும் அநுமான் முதலான நாற்பத்திரண்டு மந்திரிமாரையும் எழுபது வெள்ளம் வானர சைனியங்களையும் கைவசமாக்கி,

வனிதையைநாடிக்கொல்வீர் மலையினும்வளர்ந்ததோளீர்-எ-து.

இனிமேல் காலதாமதஞ் செய்யாமல் வனிதையென்று சொல்லப்பட்ட தேவஸ்திரீகள் காந்தர்வஸ்திரீகள் நாககன்னிகள் வித்தியாதர ஸ்திரீகள் கிம்புருட ஸ்திரீகள் முதலான மானிடஸ்திரீகளாகிய இவர்களுக்கெல்லாம் மிகுந்த சிரோரத்தின சிந்தாமணிபோல் சிலாக்கியம் பொருந்திய தேவரீருடைய தருமதாரமான மகா இலட்சுமியைத் தேடிக்கொள்ளவேணும் வாராய் ராகவேஸ்வரா பர்வதமபோன்ற புயங்கள் பொருந்தினவரான லோகநாயகா சரணம் வாராய் சுவாமி.

அவதாரிகை.

வாலியானவன் இப்படிச்சொல்லிச் சுக்ரீபனை யழைத்து அங்கதனைக் கூட்டிக்கொண்டு வரச்சொல்ல அப்படியே சுக்ரீபன் சென்று அங்கதனை யழைத்துவர அங்கதன் வாலிமேல் விழுந்து துக்கித்துச் சொல்லுகிறான்-எ-து.

கவி.

எந்தையேயெந்தையேநீ யெழுதிரைவளர்காலத்தில்
சிந்தையாற்செய்கையாலும் தீவினைசெய்கிலாதாய்
நொந்தனையதுதானிற்க நின்முகம்நோக்கிக்கூற்றன்
வந்தேதோயன்றோவஞ்சர தாரவன்விலியைத்தீர்ப்பார்.

இதன்பொருள்.

எந்தையேயெந்தையேநீ யெழுதிரைவளர்காலத்தில்-எ-து.

வாராய் தந்தையே அடியேனை அருமையோடெங்கூடிப் பயின்று வளர்த்த தந்தையே எழுதிரை ஆரம்பததுடனே இலக்ஷம் யோசனை விஸ்தாரம் பொருந்திய சமுத்திரஞ் சூழ்ந்திருக்கிற நூறாயிரம் யோசனை விஸ்தாரமாயிருக்கப்பட்ட சம்புத்தீவான இந்தப் பூமியிலே தேவரீர் உற்பவித்தநாள்முதல் இதுவரையும்.

சிந்தையாற்செய்கையாலுந் தீவினைசெய்கிலாதாய்-எ-து.

உம்முடைய சிந்தையென்னும் மனத்திலேயும் தர்மத்தினாலேயும் வாக்கினாலேயும் ஒருகுற்றங் குறைபாடுகள் யாதாமொருவருக்குச் செய்தவரல்லவே வாராய் தந்தையே இதை விசாரித்துப் பார்க்கிற போது:

கொந்தனையதுதாமிற்க நின்முகம்நோக்கிக்கூற்றன்-எ-து.

இப்படி சத்தியதர்மத்தோடு பயபக்தியோடும் நிர்மலமனத்தோடேன் கூடியிருக்கிற தேவரீருடைய சமீபத்திலே கூற்றனென்று சொல்லப்பட்டவன் சையமா நகரத்திலே இயமப்புரியென்னும் பிரதேசத்திலே மகிடவாகனமேறி மகிடக்கொடி பிடித்துக் காலபாசம் காலசூலம் தெண்டாயுத முதலியவைகளைக் கரத்திலே தாங்கி கற்கடந்தொம்பிரியும் அஸ்திமாலையுந் தரித்து காலமிருத்தியு வென்னும் மந்திரியோடுங்கூடி நவரத்தின சிங்காசனத்திலே யிருந்து சிவந்தக் கூந்தலும் இருண்டமேனியும் வளைந்த தந்தத்தோடுங்கூடி இருபத்தொரு நகர் ராசாக்கள் சூழத் திரிலோகத்திலேயும் வாழப்பட்ட சகலஜனங்களையும் அவரவர் செய்யப்பட்ட பாவபுண்ணியத்தை விசாரித்துப் புண்ணிய தேகத்தைச் சொர்க்கத்துக்கு அனுப்பிப் பாபிஷ்டரான பேர்களை அவரவர் செய்த கர்மகடூரம் போல் விசாரணை செய்து ரவுரவம் மகாரவுரவம் கோரம் அதிகோரம் உக்கிராவுரவம் கிருமிரவுரவம் மலரவுரவம் மூர்த்திராவுரவம் புழுத்துரும்பை எரிவட்டம் மணல்வட்டம் சுழல்வட்டம ஏரிபாலவட்டம் கழுமுனை முதலான நரகங்களிலேபோட்டு தெண்டனை செய்யப்பட்ட எமதர்மராசன் கர்மிகளுக்கு காமராசனாக உத்தமவடிவாகியும் அதர்மிகளுக்கு முன்சொல்லப்பட்ட எமரூபமாகியு மிருக்கின்றவர் இன்றைக்கு.

வந்தோயுன்றேவஞ்சா தாரவன்வலியைத்தீர்ப்பார்-எ-து.

உத்தமதர்மத்தோடும் ஈஸ்வரப்பத்தியோடும் தரும நீதத்தோடும் இருக்கப்பட்ட தேவரீருடைய பிராணனைப்பருகிக்கொண்டு போனபொழுதே இயமனை வெல்லுகிறபேர்கள் ஒருவருமில்லையே வாராய் தந்தையே-எ-று.

கவி.

பஞ்சின்மெல்லடியாள்பாதன் பதகமலங்களென்று
வஞ்சலித்தேத்துஞ்செங்கையாற்கடல்கடைந்துமுன்னாள்
எஞ்சலிலமாருண்ண விண்ணமுதீர்ந்தநோயா
துஞ்சினைவள்ளியோர்க ணினதிலாற்கொல்லற்பாலார்.

இதன்பொருள்.

பஞ்சின்மெல்லடியாள்பாதன் பதகமலங்களென்று-எ-து.

பஞ்சென்று சொல்லப்பட்ட செம்பஞ்சுபோலே மிருது பொருந்திய திருப்பாதங்களுடைய பார்வதாதேவியம்மனை இடது பாகத்திலே வைத்திருக்கும் பரமசிவனுடைய இரண்டு பாதார விந்தங்களையும் அல்லும் பகலும் அநுபதுநாழிகையும் கனவிலும் நினைவிலும்மறவாமற்கொண்டு.

அஞ்சலித்தேத்துஞ்செங்கை யகற்கடல்கடைந்தமுன்ஞன்-எ-து.

அஞ்சலிசெய்து இரண்டுகரங்களையும் சிரசின்பேரில் கூப்பிமன மானதை ஒருவழிப்படுத்தி இரண்டு கண்களிலும் ஆனந்த பாஷ்பம் ஒழுக்கத்தக்கதாகச் சிவசிவசிவமகாதேவாவென்று வணங்கி மகாசிவ பத்தனை யிருக்கிறவர்களுக்குக் கர்த்தனையிருக்கிற விஷ்ணுவுக்குப் பத் தனையிருக்கிற.

எஞ்சலிமலராருண்ண விண்ணமுதீர்ந்தனோயா-எ-து.

தேவாதிகளுடைய திரைநரை தீரத்தக்கதாகவும் அவர்கள் பூர ணவயதை அனுபவிக்கத்தக்கதாகவும் யாதொரு சஞ்சலமு மில்லா மல் வாழும்படியாகவும் தேவாமிர்தத்தை எடுத்துக்கொடுத்துப் பெரு மைபெற்ற தந்தையே.

துஞ்சினைவள்ளியோர்க ணின்றிலாத்கொல்லற்பாலார்-எ-து.

இப்படிச்சொல்லுகின்ற பலபல சற்கருமங்களைச் செய்யப்பட்ட தேவரீருடைய அவகேட்டினாலே இறந்துபோகும்படி நேரிட்டதோ வாரும் தந்தையே தேவரீரைப்போல் சாமர்த்தியத்தில் மிகுந்தவர் ஒருவருமில்லையே வாராய் தந்தையே என்ன செய்வேன் வாராய் தந் தையே.

அவதாரிகை,

என்று இப்படி துதிக்கிற அங்கதனைப் பார்த்து வியாகூலப்பட வேண்டாம் மகனே யென்று வாலிசொல்லுகிறான்-எ-து.

கவி.

பாலகாவிர்த்திதயன்சொல் பற்றுதிபார்க்கிற்றன்னின்
மேலொருபொருளுமில்லை மெய்ப்பொருள்வில்லைதாங்கித்
கால்தரைதோயநின்றான் காட்சிக்குமெளியனாகி
மால்தரும்பிறவிநோய்க்கு மருந்திவன்வணகுமைந்தா.

இதன்பொருள்.

பாலகாதவிர்த்தியென்சொல்பற்றுதியார்கிற்றன்னின்-எ-து.

வாராய் குமாரா யானிறந்து போகிறேனென்று வியாகூலப்பட வேண்டாம் வாராய் அங்கதா யான் சொல்லப்பட்ட வார்த்தையை நீ உறுதியாகக் கேட்க வாராய் மகனே இதோ ராகவேஸ்ர மூர்த்தியினு டைய வரலாற்றையும் காரணகாரியங்களையும் உற்று விசாரித்து அந் தக் காரணங்களிலே யோசித்தால்.

மேலொருபொருளுமில்லை மெய்ப்பொருள்வில்லைத்தாங்கி-எ-து.

லோககர்த்தாவான இந்தச் சுவாமியானவர்க்கு மேலாக ஒரு காரண காரியமும் ஒரு அதிசயவிசேஷமும் அவருக்கு மேலான ஒரு

கர்த்தத்துவமும் இல்லை இல்லை வாராய் குமாரா இவர் பிரம விஷ்ணு
ருத்திரன் மயேஸ்சுரன் சதாசிவன் பராசக்தியென்று சொல்லப்பட்
ட ஆறுதெய்வீகங்களுக்கு மற்று முண்டாகிய இராச தெய்வீகங்களு
க்கும் மேலாகம் பிரகாசிக்கிற பரமப்பொருளா யிருக்கப்பட்ட நிரும
லவஸ்துவாகும் வாராய் அங்கதா.

கால்தரைதோயநின்றான் காட்சிக்குமெளியனுகி-எ-து.

இதோ காலனென்னும் இரண்டு பதங்களும் பூமியிலே படத்த
க்கதாக கேவலமான ஒரு மனிதனைப்போல நின்றார் இந்த ராகவேஸ்
வர மூர்த்தியானவரைப் பிரத்தியக்ஷமாகக் காணவேணுமானல் மகா
துர்ப்பலம் பெரியோர்கள் வெகுகாலம் தபசு செய்தாலும் கிடைக்கா
து வாராய் குமாரா இப்போது காண்கிறதற்கு மகா வெளிதாக நிற்க
ப்பட்ட இந்த சுவாமியானவர்.

மால்தரும்பிறவிநோய்க்கு மருந்திவன் வணங்குமைந்தா-எ-து.

மாலென்ற ஆசாபாச மென்னும் மாய்கையினல் பல பல பதார்
த்தங்களிலும் தன தானியம் சம்பத்துகளிலும் பெண்டு பிள்ளை பண்டு
பதார்த்தங்கள் பேரிலும் ஆசைப்பட்டு எந்நேரமும் உழன்றுக்கொ
ண்டிருந்து அந்தி வேளையிலும் பல பல விதத்தாலே மனதை விடுவா
ர்களானல் அதனாலே ஜென்மம் வரும் அப்படி யில்லாமல் பிராணன்
போகிற சமயத்திலே இந்தப் பகவானுடைய திருநாமமாகிய ராமநா
மத்தை ஜெபித்து துதிப்பார்களானல் பிறப்பு இறப்பில்லாத சாயுச்சி
யபதத்தைக் கொடுக்கப்பட்ட அருமருந்தாகும் வாராய் அங்கதா இவ
ரை வணங்கப்பட்ட மார்க்கம் யெப்படி யென்றால் சித்தாந்த மென்றும்
வேதாந்த மென்றும் சொல்லப்பட்ட இரண்டு மார்க்கமுண்டு அதில்
பிராமணாகளும் சற்சனர்களும் செய்யப்பட்ட கிரிகையாவது அருண
வுதயத்திலே யெழுந்து அற்புதமான தெய்வங்களையும் அற்புதமான
வஸ்துக்களையும் தியானித்து நிருதிமூலையிலே சென்று சவுசவிதி
முடித்துத் தந்த விதி ஸ்நான விதி அனுஷ்டான விதி பூசைவிதி
போசனவிதி இப்படிப்பட்ட ஆறுவித தர்மங்களையும் முடிக்கவேணும்
பஞ்சயெக்கியங்கள்செய்து ஜெபம்பண்ணி மூன்றுகாலமும் காயத்தி
ரியை ரூபலட்சணமறிந்து ஜெபித்து ஆதித்தனுக்கு அர்க்கியாதிபதி பூ
சைகொடுத்து இருபத்துநாலு கர்மமுடித்துப் புராண சாஸ்திரங்களை
வாசித்து அன்போடே தேவார்ச்சனை செய்து ஓதல்ஓதுவித்தல் ஏற்ற
ல் இடுதல் வேட்டல் வேட்பித்தலாகிய ஆறுகர்மமும்செய்து பாத்திரா
பகத்திரபாத்திரங்களையறிந்து தர்மஞ்செய்து சத்தியத்துடனும்யதா
ர்த்தத்துடனும் நித்தியகர்மமுஞ் செய்யவேண்டும் மேலும் பிராமண
லோகத்திற்கண்ட தெய்வமென்றெண்ணி சத்த விர்த்தியுடனே கூடி
யிருந்தாலவன் பிராமண யோனியில் ஜன்மித்து வித்தியா வல்லவ

இத் தேஜசுபொருந்தி தீர்க்காயுசுடனும் அஷ்ட யாக்யெத்துடனும் பொருந்திவாழ்வான் இந்த கர்மவிக்கின ஒருவேளை செய்ததாலுல் அவன் நீசயோனியிலேபிறந்து கஷ்டத்தையடையவன் இந்தப்பிராமண விர்த்தியினுலாகிலும் ஞானயோகத்தினுலேயாகிலும் இராமத்தியானம் செய்தல் பிரவிசாகரத்தைகடக்கலாம் ஆகையினுலே நீஇச்சுவாமியவர்களை வணங்கிப் பணிவிடைசெய்யவேணும் வாராம் அங்கதா-எ-று.

அவதரிகை.

வாலியானவன் இப்படிச்சொல்லி அங்கதனுடைய வியாகுலத்தைத் தீர்த்துச் சுவாமியோடு சொல்லுகின்றுன்.

கவி.

இடைக்கலமென மேவியதோர்பணி
இடைக்கிலப்பொழுதே செயுங்கேண்மையோன்
படைக்கலக்கைப் பரம்பொருளேயுன்றன்
அடிக்கலம்படி யேன்பெற்றவங்கதன்.

இதன்பொருள்.

இடைக்கலமென மேவியதோர்பணி-எ-து.

வாராய்ராகவேஸ்வரா இனிமேல் இராவணுதி ராட்சதருடனே போர்செய்கிற எழுபதுவெள்ளம் வானரபடைகளோடே ஒவ்வொரு பணிவிடை சொல்லுகிறபோது.

இடைக்கிலப்பொழுதே செயுங்கேண்மையோன்-எ-து.

அதற்கிடையிலே இந்த அங்கதனேடே ஒவ்வொரு பணிவிடை சொன்னுல் அந்தக்ஷணமே முடித்துக்கொடுப்பான் வாராய்ராகவேஸ்வரா.

படைக்கலக்கைப் பரம்பொருளேயுன்றன்-எ-து.

படையென்னும்பஞ்சாயுதங்களைத்தாங்கியிருக்கிறவரானசுவாமி பரப்பிரம்ம ரூபனுகிய ராகவேஸ்வரா.

அடைக்கலம்மடி யேன்பெற்றவங்கதன்-எ-து.

இதோ என்குமாரனுகிய அங்கதன் அடைக்கலம் ஆதலால்நீரே காக்கவேணும் இந்தநாள்வரைக்கும் என்குமாரன் இனிமேல்தேவரீருடைய குமாரனுகும் வாராம் சுவாமி-எ-று.

வாலியானவன் இப்படி அடைக்கலங் கொடுத்தவனவில் ஸ்ரீராமர் அங்கதனுக் கபயஸ்தங்கொடுத்தருளியபின்பு வாலியோடு சொல்லு கிறார்.

கவி.

பெரியதோர்பிழைகள்செய்தேன் பெரும்படைவாலிகேளாய்
அரியதோர்தவத்தினாலே யாருயிர்மீட்டுக்கொள்வேன்
உரியதாநாட்டையாண்டோ யுடன்பிறந்தானுநீயும்
பரிபவதோர்பலனுங்காணப் பாரினையாள்வாயின்றே.

பெரியதோர் பிழைகள்செய்தேன் பெரும்படை வாலிகேளாய்-எ-து.

முன் ஜென்மாந்திரத்திலே பெரியகுற்றத்தைச் செய்த பெரிதாகி ய சேனைகளையும் ஆயுதங்களையுமுடைய வாலியே நீகேள்.

அரியதோர்தவத்தினாலே யாருயிர்மீட்டுக்கொள்வேன்-எ-து.

அரிதானபேர் தவத்தைச் செய்தபடியினாலே சத்திஸ்ரூபமான இராமபானத்துக்குஉன்னுயிரை கொடுத்தேன்வாராய்வாலி ஆயினும் என்னுயிரைக் கொடுக்கிறேன்.

உரியதாநாட்டையாண்டோ யுடன்பிறந்தானுநீயும்-எ-து.

உரிதான சந்தோஷத்துடனே உன்தம்பியான சுக்ரீபன் இளைய ராசாவாகவும் நீ இராசாயாகவுமிருந்து.

பரிவதோர்பலனுங்காணப்பாரினையாள்வாயின்றே-எ-து.

பரிந்துசகலமானபேர்களும் சந்தோஷிக்கத்தக்கதாக இராச்சிய பாரஞ்செய்து சுகமேவாழ்ந்திருக்கவேணும் வாராய்வாலி-எ-று.

அவதாரிகை அதுகேட்டு வாலிசொல்லுகிறான்.

கவி.

ஏவுக்குத்தப்பியிங்கே யெழுந்தனலென்னலோடும்
கோவுக்குத்தப்பிலாதாய் கொடுங்கணை தனக்குநல்லோய்
சாவுக்குத்தப்பினாலும் தன்வடுமாறுதன்றோ
யாவுக்குந்தப்பினேனே யரிகுலத்தரசனின்றே.

இதன்பொருள்.

ஏவுக்குத்தப்பியிங்கே யெழுந்தனனென்னலோடும்-எ-து.

வாராய் சுவாமி சரணம் சரணம் வாராய் ராகவேஸ்வரா தேவரீ ரும் அடியேன்பேரிலே மனுசால்திரமுறைமையாய் ஏகப்பட்ட கிர

மத்தூர்க்குத் தப்பிப்பிழைத்துக்கொண்டாலும் குற்றமுண்டு வாராய் சுவாமி.

கோவுக்குத்தப்பிலாதாய் கொடுங்கோனே தனக்குநல்லோய்-எ-து.

கோவென்றராச்சியத்தையாளுகிறதற்குக் குற்றமில்லாமல் அரசாட்சி செய்யப்பட்டவரான சுவாமி ராஜநீதியெப்படியென்றால் க்ஷத்திரியராஜன் ஐந்து வயதிலே ஆரியமொழியான அட்சராப்பியாசஞ்செய்து இதிகாசபுராணங்களைக்கற்று மநுநூலறிந்துத் தர்மசாஸ்திரமறிந்து ஆயுதாப்பியாசம்பண்ணி குருபக்தியுடனும்ராசத்தன்மை வந்தபிறகு நவரத்தின சிங்காசனத்திலே மகுடமுடி மன்னவனாகியிருந்து மந்திரிபிரதானிகள் தலகர்த்தர்கருணீகர் துரைமக்கள் இடம்வலம் சூழ விவகாரிகள் அவர் காசரண முகலட்சணங்களையும் பார்த்து மத்தியஸ்தனாலே தெளிந்து மந்திரியினுடைய யோசனையினாலும் சத்தியத்தைக்கண்டு மனுவிக்யான தர்மத்தையோர்ந்துசத்திய தர்மத்துக்குப்பயந்து சிக்ஷைசெய்யவேணும் ஆறுபோகத்திலே ஒருபோகம்திரைகொண்ட துஷ்டரை நிக்கிரகித்து சிஷ்டரைப்பரிபாலித்துபொறுமையுடனே சாமபேத தான தண்டமென்னும் சதுர்விதவுபாயத்துடனே சதுரங்ககளத்தை தொகைகொண்டு ஆயுதவாகனத்தை வகைகித்தனதானியம் சம்பாதித்துக்கொருவர்கலகம் ஆமாத்தியன்மாருடைய விரோதம் தன்னுடைய அவிவேகத்தினால் வரப்பட்ட உபத்திரமாகிய இவ்வாறுவகையும் நீக்கிப் பிரஜைகள்பேரிலேபெற்ற மாதாவானவள் குழந்தைகளை இரட்சிக்கிறதுபோலபட்சம்வைத்து பிரமாணதர்மத்தைசெய்து பிராமணபட்சத்துடனே சோடசதர்மங்களும் யாககர்மங்களும் மேன்மேலுஞ்செய்து குடிகளைமிகவும் பட்சத்துடனே இரட்சித்துத் தேவாலயங்களிலே பூசைநைவேத்தியங்கள் முறைபோல்செய்வித்து இரதவுற்சவம் திருவிழாமுதலானதுகளும் நடப்பித்து பரஸ்திரீமனம் பரதிரவிய மோசமில்லாமல் ஓதல் வேட்டல் வேட்பித்தல் வாழ்வித்தல் கொடை ஈதல் உலகாளுதல் ஆகிய ஆறுதொழிலும்செய்து வஸ்திராபரண அலங்காரத்துடனே பரிமளபுஷ்பங்களையணிந்து தெய்வதரிசன நைவேத்தியதானம் புராணகேள்வி உல்லாசசல்லாப சங்கீதகேள்வி பரதநாட்டிய சந்தோஷத்துடன் ஷட்ருசிவர்க்கங்களை போசித்து அஷ்டசுகங்களையனுபவித்து வாழ்கிறதாகும் இதிவொன்றுந்தவறாமல் இராச்சியபரிபாலனம் பண்ணப்பட்டசுவாமி அடியேன் பிழைத்துக்கொண்டேயானால் சகாயமான உமது ராமபாணத்துக்கும் குறைவுண்டுவாராய் சுவாமி.

சாவுத்தப்பினாலும் தனவமொழுதன்றே-எ-து.

அடியேனும் இரக்கப்பயந்து உயிர்பெற்றிருப்பேனானால் அடியேன்பேரிலே இதுவரையிலும் ஒருவருடைய ஆயுதம்பட்டுமறுவுற்றதில்லையே இனிதேவரீர் கிருபைவைத்து அடியேன் பிழைத்திருந்தால் இந்த அஸ்திரம்பட்ட வடுவுமறையுமோ வாராய்சுவாமி வாலியென்றும் வலிவான் என்றும் போகேட்கலாமோ வாராய் சுவாமி.

பாவுக்குந்தப்பினேனே யரிகுலத்தசரனின்றே-எ-து.

இந்தக்குற்றமொன்றும் வாராமல் தேவரீருடைய பாதாரவிந்தத்திலே சேரத்தக்கதாக அனுக்கிரகந்தரவேணும் சூரியகுலமன்னவனே சுவாமி சரணம்சரணம் வாராய் ராகவேஸ்வரா என்று வாலியானவன் தோத்திர ாராயணஞ் செய்தமாத்திரத்தில் சுவாமியானவர் அவன்மேல்வைத்திருந்த அஸ்திரத்தைப்பறித்தருளினார் அப்போது வாலியானவன் ராமாராமாவென்ற தியானத்துடனே ஸ்ரீவைகுந்தத்தை யடைந்தான்.

ஆதலால் இந்த ராமாயணகவிகளையும் வசனங்களையும்பொய்யென்று சொல்வானாயின் வாலியைப்போல வாதைப்பட்டுமரணமடைவானென்பது பெரியோர்கள் உணராமற்போகார்கள்-எ-து.

வாலிமோட்சம் மூலமும் - உரையும்

முற்றுப்பெற்றது.

